

Sunday, Piano, Nursery Rhymes
It's Morton for me all the time

# MORTON
SWEETS

I Love my Sundays ..... Nursery Rhymes and my Mummy close to me and Mortons all the time. It has been our Family's favourite for years and years.

Delicious and yummy in so many flavours. All with the goodness of Creamy Milk, Glucose and Sugar.

Chocolate and Coconut Cookies, Rose Eclairs, Supreme Chocolate and Coconut Toffees, Lacto Bonbons Mango King and so many other delicious treats.
Um m m m m Every bite a yummy delight.

*A lifetime of real goodness*

**MORTON CONFECTIONERY & MILK PRODUCTS FACTORY**
P.O. : Marhowrah 841 418 Dist. : Saran, Bihar

CC/M-1/93

**Caution Notice :**


வென்றிடும்
ப்ரைம்
PRIME
LEADER
PIDILITE
PRIME
GENIUS
MATHEMATICAL DRAWING INSTRUMENTS
PRIME
RANK
PIDILITE
PRIME
MERIT
WINNER
அறிமுகமாகிறது உயர்ந்த தரம்வாய்ந்த காம்பாஸ் பாக்ஸ் கள் - விசேடமாக துல்லிய மான உன்னத கணிப்பிற்காக உருவாக்கப்பட்டது.
உங்கள் சின்னஞ்சிறுவர் களுக்கு ப்ரைம் அனு கூலத்தை வழங்குங்கள்.
ப்ரைம் மெரிட்
ப்ரைம் ராங்க்
ப்ரைம் ஜீனியஸ்
ப்ரைம் லீடர்
மேதமெடிகல் டிராயிங் இன்ஸ்ட்ருமெண்ட்
PIDILITE PRODUCTS
PID 63 95 TAM
ZEN

# கீச்சிட்டுக் குரலெழுப்பும் மழலைச் செல்வங்களுக்கு எலெக்ட்ரானிக் பக்க வாத்தியங்கள்.

இதோ, அத்தனையும் இங்கே! பன்னாட்டு ரகங்கள். பாதுகாப்பான எலெக்ட்ரானிக் பொம்மைகள். பாடும், ஆடும், நடக்கும், பேசும், கீச்சிடும், தாவி ஏறும் – மம் டாய்ஸ் அளிக்கும் பொம்மைகள். உங்கள் வீட்டின் அந்த இளஞ்சிட்டுக்கு முற்றிலும் ஏற்றவை.



**ராப் டான்ஸர்**
எதிர்கால வெற்றி நாயகர்களுக்கு எளிதில் தரும் உற்சாகம்.





**பர்த்டே கேக் பியானோ**
அந்தப் பிஞ்சு நெஞ்சத்திற்கு பிறந்தநாள் வாழ்த்து இசைகள்.



**பவர் சாசர் டாப்**
விண்வெளி யுகத்தின் சுழற்சி. புதுயுகச் சிறார்களுக்கு மகிழ்ச்சி.



**பியானோ பென்சில் பாக்ஸ்**
மழலை மொழி பாடுவோர்க்கு இன்னிசை ஒலி.



**ராப் கேசட்**
வருங்கால மைக்கேல் ஜாக்ஸன் சின்னப் பாதங்களும் தாளம் போட, இயக்கும் இசை.




HEAD OFFICE: M.M.Toys Industries Ltd., 5, Chandra Bagh Avenue, Mylapore, Madras-4. Ph: 835151, Fax: 843919.

8018.96




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி



## சகிப்புத் தன்மை வேண்டும்.

இது யுவ வருடம். யுவன் என்றால் இளைஞன் என்று பொருள். அதனால் இந்த ஆண்டிற்கு இளைஞர் ஆண்டு என்று பொருளாகிறது. இப்படிப் பொருள்பட ஆண்டு களின் பெயர்களை ஐக்கிய நாடுகள் நிறுவனம் அறி வித்து வருகிறது. 1979ஐ இந்த நிறுவனம் குழந்தைகள் ஆண்டு என அறிவித்தது. இந்த ஆண்டை (1995) 'சகிப்புத் தன்மை ஆண்டு' என அது அறிவித்துள்ளது.

உலக நாடுகளை ஐ.நா. நிறுவனம் 1979வது ஆண்டைக் குழந்தைகள் ஆண்டாகத் கொண்டாடும் படிக் கேட்டுக் கொண்டது. 1994ஐ குடும்ப ஆண்டாகக் கொண்டாடச் சொல்லி குடும்பத்தில் யாவரும் ஒற்றுமை யாய், பிறரை மதித்து வாழ்வதை வலியுறுத்தும்படி வேண்டியது. பகவத் கீதையிலும் ஸ்ரீகிருஷ்ணரும் நண்பனையும் பகைவனையும் சமமாகக் கருதக் கூறி இருக்கிறார்.

கருத்து வேறுபாடு இருந்தாலும் எதிராளி கூறுவதைச் சகித்துப் பொறுமையுடன் கேட்க வேண்டும். காந்திஜீயும் இதையே வலியுறுத்தித் தாம் எல்லா மதங்களையும் ஒன்று போலப் பார்ப்பதாகக் கூறினார்.

இந்த 1995ம் ஆண்டை சகிப்புத் தன்மை ஆண்டாக ஐ.நா. நிறுவனம் கொண்டாட வேண்டியது காந்திஜீயின் 125வது பிறந்த ஆண்டைக் கொண்டாடும்போது நடந் துள்ளது என்பது மகிழ்ச்சிக்கானதுதானே!



**மதிமுகம்: 97** **அக்டோபர் 1995** **புன்னகை: 4**

**தனிப்பிரதி: ரூ.5.00** **வருட சந்தா: ரூ.60.00**



# மங்கை

## தீபாவளி சிறப்பு
## ஆலய மலர் - 1995



அருள்மிகு அத்திவரதர், விஷ்ணு காஞ்சி

அன்பார்ந்த வாசகர்களே!

மங்கை தீபாவளி மலர் தமிழக மக்கள் அனைவருக்கும் பயன் தரும் ஆலய மலராக - அறிவுக் கருவூலமாக - பக்தி ரஸம் கமழும் மலராக மலர இருக்கிறது. உங்கள் தூய எண்ணம் பூரிப்புடன் நிறைவுறுமாறு முதுபெரும் ஓவியர் திரு. சில்பியின் வண்ண ஓவியங்கள் மற்றும் வண்ண புகைப்படங்களுடன் முழுக்க முழுக்க வண்ண மலராக வலம் வர இருக்கிறது. இதுவரை வெளிவந்த இரண்டு ஆலய மலர்கள் தமிழகத்தில் மகிமை பொருந்திய தேவாரப் பாடல்கள் பெற்ற சிவத்தலங்களாக மலர்ந்திருந்தன.

இவ்வாண்டு தீபாவளி அன்று வெளிவரும் சிறப்பு ஆலய மலர் தமிழகத்தின் தொண்டை நாட்டு வைணவத்தலங்களான திருவல்லிக்கேணி பார்த்தஸாரதி ஆலயம், திருவுள்ளூர் வீரராகவப் பெருமாள் ஆலயம், திருப்பெரும்புதூர் ஆதிகேசவப் பெருமாள் ஆலயம், காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் ஆலயம், திருவஹிந்தபுரம் தேவநாதப் பெருமாள் ஆலயம், ஸ்ரீமுஷ்ணம் பூவராகப் பெருமாள் ஆலயம், திருக்கோவிலூர் திருவிக்கிரம சுவாமி ஆலயம், திருவரங்கம் ஸ்ரீரங்கநாதப்பெருமாள் ஆலயம் மற்றும் தஞ்சை மாவட்டத்தில் உள்ள கிருஷ்ண பஞ்ச ஆரண்யத் தலங்களைப் பற்றி விரிவான புரான மற்றும் ஸ்தல வரலாறுகளுடன் வெளிவர உள்ளது. **இதன் விலை ரூபாய். 30/-**

ஒவ்வொரு முறையும் ஆலய மலர் தீர்ந்துவிட்டதே என ஏமாற்றத்துடன் தொலைபேசி மூலமாகவோ அல்லது கடிதம் எழுதுவதன் மூலமாகவோ தெரிவிக்கும் அன்பார்ந்த வாசகர்கள், தங்கள் ஏமாற்றத்தைத் தவிர்க்க இப்போதே உங்கள் ஊர் ஏஜண்டிடமோ அல்லது கடைகளிலோ உங்கள் பெயரை முன்பதிவு செய்து கொள்ளுங்கள்.

இதர விபரங்களுக்கு:


**மங்கை ஆலய மலர்**
டால்டன் பப்ளிகேஷன்ஸ்
சந்தமாமா பில்டிங்ஸ்,
வடபழனி, சென்னை-600 026.




செய்திகளும் தகவல்களும்

# பதினேழு வயது டாக்டர்

சிகாகோ நகரில் ஜூன் 30ந் தேதி அமெரிக்காவில் வசித்து வரும் நம் நாட்டு டாக்டர்களின் கூட்டம் கூடியது. அக்கூட்டத்தின் முக்கிய விருந்தினராக வந்த அமெரிக்க ஜனாதிபதி பில் கிளிண்டன் தம் சொற்பொழிவை ஆற்ற எழுந்து நின்று ''டாக்டர் அம்படி'' எனக் கூறியதும் பதினேழு வயது வாலிபன் ஒருவன் எழுந்து நின்றான். அவனை யாவரும் மரியாதையுடன் பார்த்தனர். பில் கிளிண்டனும் ''டாக்டர் அம்படியை உலகிலேயே மிகவும் வயதில் குறைவான டாக்டரென அறிமுகம் செய்து வைத்த போது நான் மரியாதையுடன் சிரம் தாழ்த்தினேன்'' என்றார். அதைக் கேட்ட கூட்டத்தினர் எழுப்பிய கரவொலி வானைப் பிளந்தது.



கிளிண்டன் கரவொலி முடியச் சற்றுத் தம் பேச்சை நிறுத்தி பிறகு தொடர்ந்து ''இவரது தமையனாரும் தம் 19வது வயதில் டாக்டரானார் என்பது எனக்கு இப்போதுதான் தெரிய வந்தது'' என்றார். கூட்டத்தினர் அதற்கும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

ஆம்! டாக்டர் அம்படியின் சாதனை அற்ப சொற்பம் அல்ல. இவர் தம் நான்காவது வயதிலேயே மிகச் சிக்கலான கணக்குகளை மிக எளிதில் போட்டவர். ஆறாவது வயதில் இவரை 'முதல் கிரேடி'ல் சேர்த்தார்கள். சில வாரங்களிலேயே இவரை உயர் கிரேடிற்கு மாற்றினார்கள். அடுத்த மூன்று வருடங்களில் இவர் ஐந்து பிரமோஷன்களைப் பெற்றார். 1993ல் அதாவது 13வது வயதில் இவர் உடல் நூலில் பி.ஏ. பட்டம் பெற்று நியூயார்க் பல்கலைக் கழகத்தின் மிகக் குறைந்த வயதான பட்டதாரி எனப் பெயர் பெற்றார். அதற்கு அடுத்த நான்கு ஆண்டுகள் கழிந்ததும் இவர் மௌண்ட் சினாய் மெடிகல் ஸ்கூலின் வைத்தியத் துறையின் டாக்டர் பட்டம் பெற்றார்.

அம்படி பாலமுரளி கிருஷ்ணாவின் தந்தை அம்படி மோஹன்ராவ், தொழில் துறையில் பொறியியல் டாக்டர் பட்டம் பெற்றவர். தாய் கோமதி கல்வித் துறையில் டாக்டர் பட்டம் பெற்றவர். இவரது தமையன் அம்படி ஜெயகிருஷ்ணா கண் வைத்தியத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர்.

பாலமுரளி கிருஷ்ணாவும் அவரைவிடப் பத்து வயது மூத்தவரான அவரது தமையன் ஜெயகிருஷ்ணாவும் சேர்ந்து எய்ட்ஸ் நோய் பற்றி ஒரு புத்தகம் எழுதி இருக்கிறார்கள். சுற்றுப்புற சூழல் பற்றி இவர்கள் எழுதும் புத்தகம் விரைவில் வெளிவர உள்ளது.

அமெரிக்க ஜனாதிபதி ''உங்களைக் கண்டு உங்கள் உறவினர்களும் நண்பர்களும் மட்டுமல்ல, நாங்கள் எல்லோருமே கூடப் பெருமைப்படுகிறோம்'' என்று இவருக்குப் புகழாரம் சூட்டினார்.

இதில் விசேஷம் என்னவென்றால் அம்படி சகோதரர்கள் போலவே பில் கிளிண்டனும் தம் இளம் வயதில் சில வெற்றிகளைக் கண்டவர். அவர் தம் 26வது வயதில் பேராசிரியராகப் பணியாற்றியவர். 31வது வயதில் ஒரு மாநிலத்தின் ஆளுனர் ஆனார். 46வது வயதில் அமெரிக்காவின் ஜனாதிபதியாக ஆகியுள்ளார்.




# போட்டிக் கதை

ராட்சஸ உலகில் நல்லான் என்ற ராட்சஸன் இருந்தான். அவன் மற்ற ராட்சஸர்களைப் போல இராமல் நற்குணங்கள் கொண்டவனாக இருந்தான். அதனால் மற்ற ராட்சஸர்களுக்கு அவனைப் பிடிக்கவில்லை. அவன் நல்லது சொன்னாலும் கேட்கவில்லை. மூத்த ராட்சஸர்களோ அவனிடம் ''நம் இயல்பே பிராணிகளைக் கொன்று தின்பது. புலி, சிங்கங்கள் வேட்டையாடி மிருகங்களைக் கொன்று தின்கின்றன என்றால் அது அவற்றின் இயல்பு. அதை மாற்ற முடியாது. அதுபோலத்தான் நாமும்'' என்று அவனிடம் சொல்லிப் பார்த்தார்கள்.

ஆனால் நல்லான் அவர்கள் சொல்வதை ஏற்கவில்லை. அவர்கள் அப்பாவிப் பிராணிகளைத் துன்புறுத்திக் கொல்கிறார்கள் என்று எண்ணி மனம் புழுங்கினான். அவனது பெற்றோர் தமது வைத்தியனான ஒரு ராட்சஸனிடம் காட்டினார்கள். அவனும் நல்லானைப் பரீட்சித்துப் பார்த்தும் பல கேள்விகளைக் கேட்டும் முடிவில் ''நல்லானின் உடலில் எவ்வித வியாதியும் இல்லை. இது மன சம்பந்தமானது. எனவே இவன் கொஞ்ச நாட்கள் மனிதர்களின் மத்தியில் இருந்து வாழ்ந்து விட்டு வந்தால் சரியாகி விடுவான்'' என்றான்.

நல்லானும் தன் பெற்றோர்களிடம் வைத்தியர் கூறியது போலவே செய்வதாகச் கூறிவிட்டு பூவுலகில் ஒரு நகரத்தை அடைந்தான். அந்நகரைச் சில நாட்கள் சுற்றிப் பார்த்து மனிதர்களைப் பற்றி விவரமாகத் தெரிந்து கொண்டான். மனிதர்களுக்கு உடல் வலிமை குறைவு. ஆனால் புத்தி பலம் அதிகம். எனவே அவர்கள் தம் சக்திக்கும் மீறிய செயல்களைச் செய்கிறார்கள். அவர்கள் மோசடி குற்றங்கள்

—பாபநாசம் சாமா—

புரிந்தாலும் அவற்றைத் தடுக்கச் சட்டங்களை இயற்றி இருக்கிறார்கள். ஒழுங்கு அமைதியை நிலை நாட்டவே அவர்கள் முயல்கிறார்கள். இதுவே நல்லானின் கணிப்பு.

ராட்சஸ நல்லானுக்கு மனிதர்கள் வாழும் விதம் பிடித்துப் போயிற்று. அந்த நகரத்திலேயே இருந்து விடலாமென நினைத்து அவன் ஒரு அழகான வாலிபனாகத் தன் உருவை மாற்றிக் கொண்டான். ஒருநாள் அவன் ஒரு அழகான மானிட இளம் பெண்ணைக் கண்டான். அவள் பெயர் புஷ்பா. அவளை மணந்து கொள்ள அவன் விரும்பினான்.



புஷ்பா மிகவும் நல்லவளே. ஆனால் மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். அவளது தந்தை நோயுற்றுப் படுத்துக் கிடக்க அவள் தாயார் தான் தட்டுமுட்டு வேலைகளைச் செய்து குடும்பத்தை நடத்தி வந்தாள். புஷ்பா வயதான பெண்ணாதலால் அவளை வேலைக்கு அனுப்ப அவளது தாயார் விரும்பவில்லை. புஷ்பாவின் தம்பியும் வேலை செய்யும் நிலையில் இல்லை. ஏனெனில் சிறு வயதினன்.

ஒருநாள் கோவிலுக்குச் சென்ற புஷ்பாவிடம் நல்லான் தன் விருப்பத்தைக் கூறினான். அவள் திடுக்கிட்டாலும் சிரித்தவாறே ''என் திருமணம் என் இஷ்டப்படி நடக்காது. எங்கள் ஊரில் எம் தூர உறவினர் ஒருவர் இருக்கிறார். அவர் மனைவி நான்கு மக்களை விட்டு விட்டு இறந்து போய் விட்டாள் அவருக்கு என்னை இரண்டாந்தாரமாகக் கொடுக்கப் போகிறார்கள் அவர் என்னை மணந்தால் என் தந்தையின் வைத்திய செலவையும் என் தம்பிக்கு வேலை வாங்கிக் கொடுக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்வாராம். அவரது மூத்த பெண் என் வயதானவள். நான் அவரை மணக்காவிட்டால் அவர் என் வீட்டின் பேரில் கொடுத்த கடன் பணத்தை இன்னும் ஒரு வாரத்தில் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். தவறினால் நாங்கள் வீட்டை விட்டு வெளியேற்றப்படுவோம். இதுதான் எங்கள் நிலை'' என்றாள்.

அப்போது நல்லான் ''நான் உங்கள்



கடனை தீர்த்து விட்டால் நீ என்னை மணந்து கொள்வாயா?'' என்று கேட்டான். புஷ்பாவோ ''இது என் இஷ்டமில்லை. நீங்கள் என் வீட்டிற்கு வந்து என் பெற்றோரிடம் கேளுங்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றாள்.

நல்லானும் புஷ்பாவின் பெற்றோரைச் சந்தித்து தன் விருப்பத்தைக் கூறினான். அவர்கள் அவனது குலம், கோத்திரம் பற்றி விசாரிக்கவே நல்லானால் பதில் கூற முடியவில்லை. அதனால் அவனுக்குத் தம் பெண்ணைக் கொடுக்க முடியாது என்று அவர்கள் கூறி விட்டார்கள்.

அப்போதும் நல்லான் மனம் தளராமல் மற்றொரு முறையில் புஷ்பா கோவிலுக்கு வந்த போது ''நீயும் நானும் உன் தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல் மணம் செய்து கொண்டு விடலாம்'' என்று கூறினான் அவளோ ''முடியாது. எனக்கு நல்ல அதிர்ஷ்டம் இருந்தால் என் அந்த உறவினரை ஒரு வாரத்திற்குள் எந்த ராட்சஸனாவது வந்து விழுங்கட்டும்'' என்றாள். அப்போது நல்லானுக்கு ராட்சஸ வைத்தியன் மாதம் ஒரு மனிதனையாவது கொன்று சாப்பிட வேண்டும் என்று கூறியது நினைவிற்கு வந்தது. அதனால் புஷ்பாவை மணக்க நிர்பந்தப் படுத்தும் அந்த உறவினனை உடனேயே நல்லான் விழுங்கி ''இதனால் நான் ஒரு நல்ல காரியம் செய்தேன்'' என்று திருப்தி அடைந்தான்.

புஷ்பாவின் மணப் பிரச்னை அப்போதைக்கு நின்றது. ஒரு மாதம் கழிந்தது. அப்போது எந்த மனிதனை அடுத்த மாதம் பிடித்துத் தின்பது என்ற பிரச்னை நல்லானின் முன் வந்தது. அவன் ஒரு சன்னியாசியைக் கண்டு அவருக்கு சொந்த பந்தம் என்று யாரும் இல்லாததால் அவரைப் பிடித்து நிறுத்தினான்.

அவரோ ''நல்லான்! நீ நல்லவன். நீ என்னைக் கொன்று தின்பது சரியல்ல. ஏனெனில் நான் அறிவுரைகள் கூறி மனிதர்களை நல்வழிப்படுத்தி வருகிறேன். மனிதர்கள் கஷ்டப்படும் போது நான் சொல்லும் நல்லுரைகளைக் கேட்டு ஆறுதல் அடைகிறார்கள் எனவே என் மரணம் மானிடர்களுக்குப் பெருத்த நஷ்டம். என்னைக்

கொன்றால் உனக்குப் பாவமே கிடைக்கும்'' என்றார்.

சன்னியாசி தன்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டதால் நல்லான் திடுக்கிட்டான். அவன் அவரை மரியாதையுடன் வணங்கி ''எனக்கும் அறிவுரைகூறுங்கள்'' என்று வேண்டினான். அப்போது அவர் புஷ்பாவின் மற்றொரு உறவினரான கோபாலன் என்பவனைப் பற்றிக் கூறி ''அவனுக்கு மணமாகி எட்டு வருடங்களாகியும் அவனுக்கு ஒரு குழந்தை கூட பிறக்கவில்லை. அவனோ பெரும் பணக்காரன். நான் அவனிடம் சுவீகாரம் எடுத்துக் கொள்ளும்படிக் கூறினேன். அவன் அதுபற்றி இன்னமும் முடிவு செய்யவில்லை. நீ அவனது சுவீகாரப் புத்திரனாக ஒரு வழி சொல்கிறேன். இந்த ஊரில் ஆசையப்பன் என்ற வியாபாரி இருக்கிறான். அவன் குறுக்கு வழிகளில் பணம் சம்பாதிப்பவன். ஒரு பொருளின் விலையை மிகவும் உயர்த்திக் கொள்ளை லாபம் சம்பாதிப்பவன். நீ அபூர்வ சக்திகள் கொண்டவன் என்றும் மாய மந்திரங்கள் தெரிந்தவன் என்றும் ஊரார் பேசிக் கொள்கிறார்கள். ஆதனால் நீ ஆசையப்பனுக்குப் போட்டியாக ஒரு கடையை ஆரம்பித்து மலிவு விலையில் எல்லோருக்கும் பொருள்களை விற்க ஆரம்பி. அப்போது உன்னை கோபாலன் ஸ்வீகாரம் எடுத்துக் கொள்வான். அதன்பின் உன்னிடம் யாரும் குலம், கோத்திரம் என்றெல்



லாம் கேட்க மாட்டார்கள். உனக்கும் புஷ்பாவிற்கும் எளிதில் திருமணம் நடந்து விடும்'' என் றார்.

நல்லானும் ''சரி, நீங்கள்கூறியபடி செய்கிறேன். ஆனால் ஒவ்வொரு மாதமும் ஒரு மனிதனைக் கொன்று தின்றாக வேண்டுமே'' என்றான். சன்னியாசியும் ''அடுத்த தெருவில் குமரன் என்ற மகா சோம்பெறி இருக்கிறான். அவனுக்கு சாப்பிடுவதும் தூங்குவதும்தான் வேலை. ஒரு வேலையும் செய்வதில்லை. அவனோடு இளைஞர்கள் சேர்ந்து உதவாக்கரைகளாக ஆகிறார்கள். அவன் ஒழிந்தால் நல்லதே'' என்றார்.

அன்றிரவே நல்லான் குமரனைக் கொன்று தின்று விட்டான். அதன்பின்



கொன்று சாப்பிட அவனுக்கு மலையப்பன் கிடைக்கவே நல்லான் அவனைக் கொன்று தின்று விட்டான்.

ஆனால் அடுத்த மாதம் யாரைக் கொன்று தின்பது என்று நல்லான் யோசிக்கலானான். இச்சமயம் கோபாலன் அவனிடம் வந்து ''உன்னைப் பற்றி ஒரு சன்னியாசி கூறினார். நான் உன்னை என் வளர்ப்பு மகனாக ஸ்வீகாரம் எடுத்துக் கொள்ள நினைக்கிறேன். உனக்கு சம்மதமா?'' என்று கேட்டான் நல்லானும் அதுகேட்டு மகிழ்ந்து போய்த் தன் சம்மதத்தை தெரிவித்தான். கோபாலன் முறைப்படி நல்லானை ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டான்.

அப்பகுதியில் ஒரு இடத்தை தேர்ந்தெடுத்து அவன் இரவோடு இரவாக அங்கு ஒரு கட்டிடத்தை எழுப்பினான். மறுநாள் காலை ஆசையப்பனுக்குப் போட்டியாக அதில் ஒரு கடையை ஆரம்பித்தான். நாளாக ஆக அந்தக் கடைக்கு வருவோர் எண்ணிக்கை அதிகரித்தது. ஆசையப்பனின் கடைக்குச் செல்வோர் குறைந்து போயினர்.

இதனால் ஆத்திரம் கொண்ட ஆசையப்பன் நல்லானைக் கொல்ல மலைப்பன் என்ற பயில்வானை அனுப்பினான். மலையப்பன் மிகுந்த பலசாலி முரடன். பார்க்கவே பயங்கரமாக இருப்பான். அவன் வந்தது நல்லானுக்கு நல்லதாயிற்று. அந்த மாதம்

இதற்குப் பின் நல்லான் அந்த சன்னியாசியைத் தேடிக் கொண்டு போனான். அவன் அவரிடம் ''ஐயா! நான் மனிதர்களிடையே நிரந்தரமாக வாழ விரும்புகிறேன். ஆனால் அதற்காக நான் மாதம் ஒரு மனிதனை யாவது கொன்று சாப்பிட வேண்டுமே. இந்நிலையில் கெட்ட மனிதர்கள் எனக்குக் கிடைப்பது அரிதாகி விடுமே என்ன செய்வது?'' என்று கேட்டான். சன்னியாசியும் ''இதற்கு ஒரே வழி உன் ராட்சஸ உருவத்தை யாராவது ஒருவருக்குக் கொடுத்து விடுவதுதான்'' என்றார்.

நல்லான் யோசித்தவாறே தன் கடைக்கு வந்தான். யாருக்குத் தன் ராட்சஸ உருவத்தைக் கொடுப்பது

என்று அவன் யோசித்துக் கொண்டிருந்த போது ஆசையப்பன் கோபத்தோடு அங்கு வந்தான். அவன் நல்லானிடம் ''நான் பயில்வான் மலையப்பனை இங்கே அனுப்பினேனே. அவனை நீ யாரோ ஒரு ராட்சஸனுடைய உதவியோடு கொன்று விட்டதாக மந்திரவாதிகள் கூறினார்கள். எங்கே அந்த ராட்சஸன்? அவனைக் காட்டு. உனக்கு ராட்சஸ லோகம் பற்றித் தெரியும் போலிருக்கிறதே. என்னை அங்கு ஒருமுறை போகச் செய்'' என்றான்.

நல்லானும் ''ஆகா, என்னால் உன்னை அங்கு அனுப்ப முடியும். ஆனால் நீ உன் சொத்தை எல்லாம் எழுதிக் கொடுத்தால் நான் உன்னை அங்கு அனுப்பி வைக்கிறேன்'' என்றான். ஆசையப்பனும் தான் ராட்சஸனாகி விட்டால் திரும்ப எல்லாவற்றையும் பெறுவதோடு அந்நாட்டின் மன்னனாகவே ஆகி விடலாம் என்று எண்ணி நல்லானுக்குத் தன் சொத்தை எல்லாம் எழுதிக் கொடுத்துவிட்டான்.

நல்லான் தன் மோதிரத்தை எடுத்து ஆசையப்பனின் விரலில் போட்டான். மறுவிநாடியே ஆசையப்பன் ராட்சஸனாக ஆகி மாயமாய் மறைந்து போனான். நல்லான் இதற்குப்பின் அந்த சன்னியாசியைப் போய்ப் பார்த்தான். அவரும் ''ராட்சஸனானவன் உன் போல நற்குணவானாகத் திரும்பி வரமாட்டான். ராட்சஸ லோகத்திலேயே இருந்து விடுவான். நீ உன் உருவத்தை ஆசையப்பனுக்குக் கொடுத்து விட்டதால் உன் ராட்சஸ சக்திகளெல்லாம் போய்விட்டன. நீ இப்போது சாதாரண மனிதன். நீ புஷ்பாவை மணந்து கொண்டு ஆசையப்பன் உனக்குக் கொடுத்த செல்வத்தோடு சுகமாக வாழ்ந்துவா'' என ஆசிகள் கூறினார்.

நல்லான் புஷ்பாவை மணந்து அவளது தம்பிக்குத் தன் போட்டிக் கடையிலேயே வேலையும் போட்டுக் கொடுத்தான். இதன்பின் யாவரும் சுகமாக வாழ்ந்தார்கள்.



# கஷ்டப்படாமல் கிடைக்கும் காசு!

ராமசுந்தரம் தன்னைப் போல புத்திசாலி யாருமில்லை என்றும் தன் மூளையை உபயோகித்து எந்த வேலையும் செய்து விட முடியும் என்றும் நம்பி வந்தான். ஒருமுறை அவன் தன் வீட்டைப் பூட்டிக் கொண்டு அடுத்த ஊருக்குப் போய் விட்டுத் திரும்பி வந்தான். அப்போது அவனது வீட்டுச் சாவி தொலைந்து விட்டது. வெகுநேரம் முயன்றும் அவனால் கதவைத் திறக்க முடியவில்லை.

அதனால் அவன் பூட்டு ரிப்பேர் செய்யும் பூதலிங்கத்தை அழைத்து வந்தான். அவனும் தன் சாவிக் கொத்திலிருந்து ஒரு சாவியை எடுத்துப் போட்டு இரண்டே நிமிஷத்தில் கதவைத் திறந்து கொடுத்து விட்டு ஐந்து ரூபாய் வாங்கிக் கொண்டு போனான். அது கண்டு ராமசுந்தரம் ''ஓ! இது கஷ்டப்படாமல் நிறையப் பணம் சம்பாதிக்க வைக்கும் தொழில்'' என நினைத்து அதனை பூதலிங்கத்திடமிருந்து இரண்டு மாத காலத்தில் கற்றுக் கொண்டான். அதன்பின் அந்தத் தொழிலில் அவனுக்கு நிறைப் பணம் கிடைத்தது.

ஒருநாள் இருவர் ராமசுந்தரத்திடம் வந்து ''வீட்டுச் சாவி தொலைந்து விட்டது. வந்து கதவைத் திறந்து கொடு'' என்று கூறி அவனுக்குப் பத்து ரூபாய் கொடுத்து அழைத்துப் போயினர். அவர்கள் காட்டிய வீட்டுக் கதவை ராமசுந்தரம் ஒரு சாவியால் திறந்து கொண்டிருந்தான். அப்போது சில காவல் வீரர்கள் வந்து மூவரையும் திருடர்கள் என்று கூறிப் பிடித்துக் கொண்டுபோய் நீதிபதி முன் நிறுத்தினார்கள், ராமசுந்தரம் தான் குற்றவாளியல்ல என்றும் பூட்டு ரிப்பேர் செய்பவன் என்றும் மற்ற இருவர் அழைத்து வந்ததின் பேரில் அவ்வீட்டுக் கதவைத் திறக்க முயன்றதாகக் கூறினான். நீதிபதியோ ''உனக்கு திருடர்களுக்கும் வீட்டுச் சொந்தகாரனுக்கும் வித்தியாசம் கண்டுபிடிக்கத் தெரியவில்லை. நீ இந்தத் தொழிலுக்கே லாயக்கில்லை'' என்று கூறி அவனை தண்டித்தார்.






# 3

(ட்ராயிலிருந்து தாயகம் திரும்பிச் சென்ற ரூபதரன் ஒற்றைக் கண் ராட்சஸனின் தீவில் வழி தவறி இறங்கினான். அவன் தன் பனிரெண்டு ஆட்களுடன் ஒரு ஒற்றைக் கண் ராட்சஸனின் குகைக்குள் அகப்பட்டுக் கொண்டு விட்டான். அந்த ராட்சஸன் அந்த ஆட்களில் சிலரைப் பிடித்துக் கொன்று சாப்பிட்டு விட்டான். ரூபதரன் தந்திரமாக அந்த ராட்சஸனின் கண்ணைக் குத்திக் குருடாக்கி விட்டு மீதமுள்ள தன் ஆட்களுடன் அத்தீவிலிருந்து தப்பித் தன் கப்பலில் ஏறி அங்கிருந்து தன் ஆட்களோடு கிளம்பி விட்டான். அதன் பிறகு–)

ரூபதரனின் கப்பல்கள் நௌகாத் தீவை அடைந்தன. அத்தீவு கடலில் மிதப்பது என்பது எல்லோரும் கூறி வந்தார்கள். அத்தீவில் மிகப் பலமான வெண்கலக் கோட்டை இருந்தது. அந்தக் கோட்டையின் அதிபன் சித்திராஸ்வன் என்பவன். எண் திசை தேவர்கள் அவனது நண்பர்கள் இவனுக்கு ஆறு மகன்களும் ஆறு மகள்களும் இருந்தனர்.

இந்த சித்திராஸ்வன் ரூபதரனையும் அவனது ஆட்களையும் வரவேற்று ஒரு மாத காலம் தன் விருந்தினர்களாக இருக்கச் செய்தான். ட்ராய்ப் போரைப் பற்றியும் அதில் கிரேக்க வீரர்கள் புரிந்த துணிகரச் செயல்கள் பற்றியும் ரூபதரன் அவனிடம் விவரித்துக் கூறினான். இப்படியாக ஒரு மாதம் கழிந்தது.

ஒருநாள் ரூபதரன் சித்திராஸ்வனி



தப் பையில் ஒரு காற்றைத் தவிர மற்ற ஆறு வகைக் காற்றுகளையும் அடைத்து வைத்திருக்கிறேன். வெளி யிலுள்ள அந்த ஒரு காற்று மட்டும் உங்கள் கப்பல்களை உங்கள் நாட்டிற் குக் கொண்டு போய்ச் சேர்க்கும். அதுவரை நீ இந்தப் பையைத் திறக்கக் கூடாது. நீ உன் நாட்டின் கரையில் இறங்கிய பிறகே இதனைத் திறக்க வேண்டும். அதற்கு முன் திறந்தால் உங்களுக்கு ஆபத்தே நேரிடும்'' என் றான்.

ரூபதரன் அவனுக்கு தன் நன்றியை செலுத்தி அப்பையை வாங்கி பத்திர மாக வைத்துக் கொண்டான். அதன் பின் அவன் தன் ஆட்களுடன் கப்ப லில் தன் நாட்டிற்குப் பயணமானான். சித்திராஸ்வன் கூறியபடியே கப்பல் கள் எவ்வித இடையூறும் இல்லாமல் சென்று கொண்டிருந்தன. ஒன்பது நாட்கள் கழிந்து பத்தாவது நாள் காலை அவர்களுக்கு இதிகாவின் கரை தெரிந்தது.

தம் தாய் நாட்டைக் கண்டதும் ரூப தரனுக்கும் அவனது ஆட்களுக்கும் அளவில்லாத ஆனந்தம் ஏற்பட்டது. இன்னும் சற்று நேரத்தில் கப்பல்கள் இதிகாவின் கரையை அடைந்து விடப் போகிறது என்று எல்லோரும் கரை இறங்கித் தம் இல்லங்களை அடையப் போவது குறித்து மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள்.

நௌகாத் தீவிலிருந்து கிளம்பி யது முதல் ரூபதரன் சித்திராஸ்வன்

டம் ''நாங்கள் இன்னும் எத்தனை நாட்கள்தான் உங்கள் விருந்தினராக இருப்பது? எங்களுக்கு விடை கொடுங்கள். அத்துடன் எங்கள் பய ணம் எவ்வித இடையூறும் இல்லாமல் நடக்க நீங்கள் உதவ வேண்டும். இதுவரை நாங்கள் பலதரப்பட்ட கஷ்டங்களை அனுபவித்து விட் டோம்'' என்றான்.

சித்திராஸ்வனும் அவர்களுக்கு உதவுவதாக வாக்களித்தான். வாயு தேவன் ஏழுவிதக் காற்றுகளை சித்திராஸ்வனின் கட்டளைப்படி அடக்கி வைத்திருந்தான். அதனால் சித்திராஸ்வன் ஆறுவிதக் காற்றுகளை ஒரு பையில் போட்டு அடைத்து அப் பையை ரூபதரனிடம் கொடுத்து ''இந்

கொடுத்த பையை எங்கும் வைக்காமல் தன்னிடமே பத்திரமாக வைத்துக் கொண்டிருந்தான். ஒன்பது நாட்கள் இவ்வாறு பாதுகாத்துவிட்டு இதிகாவின் கரையைக் கண்ட ரூபதரன் இனிக் கவலை இல்லை என்று அயர்ந்து தூங்கி விட்டான்.



அவன் தூங்கியதும் அவனது ஆட்களில் சிலர் அவன் எப்போதும் ஒரு பையை எங்குமே வைக்காமல் பாதுகாத்து வந்ததால் அதில் ஏதோ விலையுயர்ந்த பொருள்கள் இருக்கும் என்று எண்ணி அதனை எடுத்துப் பார்த்தார்கள். அவர்கள் அப்பையைத் திறந்ததும் அதில் அடைபட்டிருந்த ஆறு வகைக் காற்றுகளும் சீறிக் கொண்டு வேகமாக வெளியே வந்தன.

அவை வந்த வேகத்தில் கப்பல்கள் இதிகாவின் கடற்கரைக்குச் செல்லாமல் வந்த வழியே திரும்பிப் போய் நௌகாத் தீவை அடைந்தன. ரூபதரனும் அவனது ஆட்களும் திகைத்துப் போயினர். ரூபதரன் அவர்களிடம் விசாரிக்கவே அவர்களும் ''நீங்கள் அந்தப் பையை மிகவும் பத்திரமாக வைத்திருந்ததால் அதனுள் மிகவிலையுயர்ந்த நவரத்தினங்களோ அல்லது வேறு ஏதாவது அதிசயப் பொருள் இருக்கலாமென்று எண்ணித்தான் நாங்கள் அதை நீங்கள் தூங்கிக் கொண்டிருந்த போது எடுத்து மிகவும் சிரமப்பட்டுத் திறந்தோம். அது இப்படி விபரீதத்தில் போய் முடியும் என்று சற்றும் எதிர்பார்க்கவில்லை'' என்றார்கள் மிகவும் வருந்தியவாறே.

ரூபதரனும் ''என்ன முட்டாள்தனமான வேலை செய்து விட்டீர்கள்? நான் இவ்வளவு நாட்களாக சிரமப்பட்டதை எல்லாம் ஒரு நொடியில் வீணாக்கி விட்டீர்களே. இப்போது என்னவாயிற்று? பழையபடி நாம் நௌகாத் தீவிற்கே வந்து விட்டோம். சித்திராஸ்வன் என்னை எச்சரித்திருந்தும் நான் சற்று கவனக் குறைவாக இருந்து விட்டதால் இத்தகைய விபரீதம் நிகழ்ந்து விட்டது. இனி மறுபடியும் அவரது உதவியைத்தான் நாட வேண்டும்'' என்று சலித்துக் கொண்டே கூறினான்.

தன் ஆட்களைக் கடிந்து கொள்வதில் எவ்விதப் பயனும் இல்லை எனக்

கண்டு ரூபதரன் நௌகாத் தீவில் இறங்கினான். அங்கு கடற்கரையில் அவர்கள் கூடாரங்கள் போட்டு சமையல் செய்து உணவை உண்டனர். ரூபதரன் தன்னுடன் இருவரை அழைத்துக் கொண்டு சித்திராஸ்வனைக் காணச் சென்றான். சித்திராஸ்வன் ரூபதரனைக் கண்டதும் ஆச்சரியத்தோடு ''இன்னும் நீங்களெல்லாம் புறப்பட்டு உங்கள் ஊருக்குப் போகவில்லையா?'' என்று கேட்டான்.

ரூபதரனும் ''அரசே! என்னவென்று சொல்வேன்? நான் சற்று கவனக் குறைவாக இருந்து விட்டேன். அப்போது என் ஆட்களில் சிலர் தாங்கள் கொடுத்த பையை எடுத்துத் திறந்து விட்டார்கள். அதனால் அதில் அடைபட்டிருந்த காற்றுகள் வேகமாக வெளிவந்து எங்கள் கப்பல்களை இதிகாவின் கரையை அடையவிடாமல் செய்ததோடு எங்களை இங்கே மறுபடியும் சேர்த்து விட்டன. நீங்கள் தாம் மறுபடியும் எங்களுக்கு உதவி புரிய வேண்டும்'' என்று கெஞ்சிக் கேட்டான்.

ஆனால் சித்திராஸ்வனோ கோபத்தோடு ''நீங்களெல்லாம் பாவிகள். நீங்கள் தேவதைகளுக்கு எதிரிகளாகி விட்டீர்கள். இப்படிப் பாவம் புரிந்தவர்களுக்கு நான் உதவ மாட்டேன். நீங்களெல்லோரும் இப்போதே இந்தத் தீவை விட்டுப் போய் விட வேண்டும்'' என்று சற்றும் இரக்கம் காட்டாமல் கூறி விட்டான். ரூபதரன் பலமுறைவேண்டியும் அவன் சற்றும் அசைந்து கொடுக்கவில்லை.



ரூபதரன் கடற்கரைக்கு வந்து தன் ஆட்களுடன் கப்பல்களில் ஏறிக் கொண்டு உடனேயே அந்தத் தீவை விட்டுக் கிளம்பி விட்டான். இன்னமும் அங்கே இருந்தால் சித்திராஸ்வனின் கோபத்திற்கு ஆளாக வேண்டி வரும். கப்பல்கள் கிளம்பி விட்டன. ஆனால் காற்றோ அனுகூலமாக இல்லை. அவனது ஆட்கள் சிரமப்பட்டு கைவலிக்கத் துடுப்பு வலிக்க வேண்டி வந்தது.

சற்றும் ஓய்வு இல்லாமல் ஆறு நாட்கள் அவர்கள் இடைவிடாது துடுப்பு வலித்து கப்பல்களை ஓட்டிக் கொண்டே இருந்தனர். ஏழாவது நாள் அவர்கள் ஒரு தீவை அடைந்தனர். அது பனிபடர்ந்த பிரதேசம். அங்கு பல மாதங்கள் பகலாகவே இருக்கும். சூரியன் அஸ்தமித்த சிறிது நேரத்திலேயே காலையாகி விடும். எங்கு சூரியன் உதிக்கிறான், எங்கு மறைகிறான் என்பது அங்கு புதிதாக வருபவர்களுக்குத் தெரியவும் தெரியாது.

ரூபதரனின்கப்பல்கள்கரைசேர்ந்த இடத்தில் சிறு சிறு குன்றுகள் மிகவும் பக்கம் பக்கமாக இருந்தன. அவற்றினிடையே ஒரு கப்பல் மட்டுமே செல்ல முடியும். அதன் வழியே சென்றபின் பெரிய கடலை அடையலாம். அது பெரிய ஏரிபோல வளைந்து கப்பல்கள் வசதியாகத் தங்கும் துறைமுகம் போல அமைந்திருந்தது. ரூபதரன்அவ்வழியாக மற்ற எல்லாக் கப்பல்களையும் அனுப்பி விட்டுத் தன் கப்பலை மட்டும் அக்குன்றின்ஓரமாகக்கட்டி நிறுத்தினான்.



அதன்பின் அவன் அக்குன்றின் உச்சியை அடைந்து நாற்புறமும் பார்க்கலானான். கண்ணுக் கெட்டிய தூரம் வரை ஒரு மரமோ செடியோ இருக்கவில்லை. ஆனால் வெகுதூரத்தில் புகை ஓரிடத்திலிருந்து கிளம்பி வந்து கொண்டிருந்தது.

அவன் தன் மூன்று ஆட்களை அழைத்து ''நீங்கள் அந்த புகைவரும் இடத்திற்குப் போய் அங்கே உள்ளவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று அறிந்து வாருங்கள்'' என்று சொல்லி அனுப்பினான். அவர்களும் அந்த வீட்டை நோக்கிச் சென்றனர்.

அவர்களும் அந்த வீட்டை அடைந்து உள்ளே போன போது ராட்சஸி போன்ற ஸ்திரீயைக்கண்டார்கள். அவள் உடனே ஒருவனை அனுப்பித் தன் கணவனை அழைத்து வரச் சொன்னாள். அவன் வந்ததும் ரூபதரனின் ஆட்களில் ஒருவனைப் பிடித்து தரைமீது அடித்துக் கொன்று இழுத்துக் கொண்டு சென்றான். இதைக் கண்ட மற்ற இருவரும் அங்கிருந்து வேகமாக ஓடிவந்து தம் கப்பலை அடைந்தனர்.

அவர்களை பிடிக்க அந்த வீட்டு ராட்சஸனும் இன்னும் சில ராட்சஸர்களும் ஓடி வந்தார்கள். அவர்கள் குன்றின் மீது ஏறிக் கடலில் தென்பட்ட கப்பல்கள் மீது பெரிய பெரிய பாறாங்கற்களைஎறிந்தனர். கடலோரமாக இருந்த கப்பல்களெல்லாம் அழிந்து போயின. அவற்றில் இருந்தவர்களும் கற்களால் நசுங்கி இறந்து போனார்கள். ராட்சஸர்கள் கூச்சலிட்டுக் கொண்டு இறந்தவர்களைத் தம் ஈட்டிகளில் குத்தி எடுத்துக் கொண்டு சென்றார்கள்.

ரூபதரன் தன் கப்பலை வேகமாக ஓட்டுமாறு அதிலிருந்தவர்களிடம் கூற, அவர்களும் வேக வேகமாகத் துடுப்பு வலித்தார்கள். அந்த ஒரு கப்பல்தான் ராட்சஸர்களின் தாக்குதலிலிருந்து தப்பியது. மற்ற கப்பல்களும் அதிலிருந்தவர்களும் அடியோடு அழிந்து போயினர்.

**(தொடரும்)**



## அம்புலிமாமா செய்திகள்

### பிரமிட் கட்டடங்கள்

எகிப்தின் பிரமிட்கள் உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றெனப் புகழ் பெற்றவை. இறந்த அரச குடும்பத்தினரின் உடல்கள் கெடாமல் பாதுகாத்து வைத்திருக்க பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. இவற்றின் அற்புதக் கட்டட வேலை இக்காலத்துப் பொறி இயல் நிபுணர்களை வியக்க வைத்துள்ளது. கீழே சதுர வடிவமும் மேலே முக்கோண வடிவிலும் இவை அமைந்துள்ளன.



இவற்றுள் மனித உடல்களை பத்திரமாக வைப்பதோடு மேலும் பல பொருள்களை வைத்து பல வருடங்களுக்கு அவை கெடாமலிருக்கச் செய்திருக்கிறார்கள். பிரமிட் வடிவில் தயாரிக்கப்படும் அட்டைப் பெட்டிகளில் வைக்கப்படும் பழங்களும் காய்கறிகளும் கெடாமல் செய்ய முடியும் என நிபுணர்கள் கருதுகிறார்கள். பிரமிட் வடிவில் கட்டப்படும் வீடுகளில் வசித்தால் ஆரோக்கியம் கெடாது எனப் பலர் கருதுகிறார்கள். இனிமேல் பிரமிட் வடிவில் கட்டடங்கள் கட்டப்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கும் இல்லை!

### உயரமான கட்டடம்

ஜப்பானில் வீடு கட்டும் 37 நிறுவனங்களின் பொறியியல் நிபுணர்கள் சீனாவின் ஷாங்கை நகரில் 470 மீட்டர் உயரக் கட்டடம் ஒன்றைக் கட்டப் போகிறார்கள். 95 அடுக்கு மாடிகள் கொண்ட இது மலேசியாவில் கட்டப்படும் 452 மீட்டர் உயரக் கட்டடத்தை விடவும் அமெரிக்காவின் சிகாகோ நகரில் கட்டப்பட்டு வரும் 443 மீட்டர் உயரக் கட்டடத்தை விடவும் உயரமானது. 882 மில்லியன் டாலர் செலவில் கட்டப்படும் இந்த ஷாங்கைக் கட்டடம் இன்னும் ஐந்தாறு ஆண்டுகளில் கட்டி முடிக்கப்பட்டு விடும்.

### பற்களின் குன்று

ஷாங்கையிலுள்ள யாகின் என்ற பல் வைத்தியர் கடந்த 30 ஆண்டுகளில் தாமும் தம் ஆறு மாணவர்களும் நோயாளிகளின் பற்களைப் பிடுங்கி அவற்றைப் பத்திரப்படுத்தி வந்தார்கள். அவை மொத்தம் 28,000 பற்கள். இவற்றை விசேஷ முறையில் தயாரிக்கப்பட்ட பசைகளைக் கொண்டு ஒட்ட வைத்து 2.5 மீட்டர் உயரமுள்ள சிறு குன்றை அவர் தயாரித்திருக்கிறார். உலக சாதனைகளைப் பதிவு செய்யும் சிலர் கூட வந்து இதைப் பார்த்துவிட்டுப் போயிருக்கிறார்கள்.

### ரப்பர் அணைக்கட்டு

மத்திய சீனாவில் ஹுனான் பகுதியில் நான்யாங்க் நகரில் 500 மீட்டர் நீளமும் 3.5 மீட்டர் உயரமும் உள்ள ஒரு அணைக்கட்டை முழுக்க முழுக்க ரப்பரைக் கொண்டு தயாரித்து வருகிறார்கள். காற்று அல்லது நீரை நிரப்பிய ரப்பர் பைகள் கற்களையும் சிமிண்டையும் விட உறுதியானவையாயும் மலிவாயும் இருந்து அணைக்கட்டாகப் போகிறதாம்.




## ஏன் அப்படிச் செய்தார்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்துகொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! அரண்மனையில் அரச போகங்களுடன் இருக்க வேண்டிய நீ அர்த்த ராத்திரி வேளையில் ஏன் இப்படி அவஸ்தைப்படுகிறாய்? உன்னை யாராவது இப்படிச் செய்யும்படித் தூண்டிவிட்டார்களா? நீயும் அவன் கூறியதை உடனே ஏற்று நடந்து விட்டாயா? சில சமயங்களில் மகா புத்திசாலிகள் கூடத் தடுமாறுவதும் உண்டு. இதனை விளக்க வாசஸ்பதி என்ற பெரும் பண்டிதரின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

வைடூரியத் தீவின் மன்னனுக்கு வெகு நாட்களுக்குப் பிறகு ஒரு ஆண்

## வேதாளம் சொல்லும் கதை



குழந்தை பிறந்தது. அதை அரசனும் அரசியும்சீராட்டிப்பாராட்டி வளர்த்து வந்தார்கள். அக்குழந்தையின் ஆறாவது ஆண்டு நிறைவு விழா கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. அப்போது தோட்டத்தில் பந்து விளையாடிக் கொண்டிருந்த அந்த அரசகுமாரன் திடீரெனக் காணாமல் போய் விட்டான். அரசாங்க வீரர்கள் எங்கு தேடியும் அச்சிறுவன் கிடைக்கவே இல்லை.

வைடூரியத் தீவை அடுத்து புஷ்பராகத் தீவு இருந்தது. இந்த இரு தீவுகளுக்கும் இடையே கடும் பகைமை நிலவி வந்தது. இரு தீவுகளும் சமமான படைபலம் பெற்றிருந்ததால் ஒன்றை மற்றது தாக்காமல் இருந்தது.

தன் மகன் காணாமல் போனதால் வைடூரியத் தீவு மன்னன் புஷ்பராகத் தீவு மன்னனைச் சந்தேகித்தான்.

அதற்கு ஏற்ப புஷ்பராகத் தீவின் ராஜபுரோகிதர் வாசஸ்பதி வைடூரியத் தீவின் கடற்கரையில் அரசாங்க வீரர்களிடம் சிக்கி விட்டார்.

வாசஸ்பதி மகா பண்டிதர். எல்லா மொழிகளோடு மிருகங்கள் பறவைகள் ஆகியவற்றின் மொழிகளையும் கற்றவர். மாய மந்திரங்களையும் நன்கு அறிந்தவர். அவர் புஷ்பராகத் தீவின் மன்னனின் மகனுக்கு இளவரசன் பட்டம் சூட்டும் விழாவில் கலந்து கொள்ள பல நாட்டு மன்னர்களை நேரில் போய் அழைக்க ஒரு கப்பலில் சென்று கொண்டிருந்தார். அப்போதுதான் அவரது கப்பல் புயலில் சிக்கி வைடூரியத் தீவின் கரையோரமாக ஒதுக்கப்பட்டது.

வைடூரியத் தீவின் மன்னன் அவரிடம் பல கேள்விகளைக் கேட்டும் அவர் தமக்கு அவனது மகன் எப்படி மாயமானான் என்பது தெரியாது எனக் கூறினார். அம்மன்னனுக்கும் வாசஸ்பதிக்கு உண்மையிலேயே அது பற்றி எதுவும் தெரியாது என்பது உறுதியாயிற்று. ஆனாலும் அவன் ''நீங்களோ எல்லாம் தெரிந்தவர். என் மகனைக் கண்டுபிடித்துக் கொடுத்தால்தான் உங்களை இந்தத் தீவை விட்டுப் போக விடுவேன். என் மகன் கிடைக்கும் வரை நீங்கள் இங்கேயே தான் இருக்க வேண்டும்'' எனக் கூறி

விட்டான்.

வாசஸ்பதி என்ன செய்வார் பாவம்? எங்கே போய் அரசகுமாரனைத் தேடுவார்? அவனைக் கண்டு பிடித்துக் கொடுக்கா விட்டால் அவருக்கு விடுதலை கிடையாது. அவருக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. அவர் கோட்டை மதில் மீது ஏறி யோசனை செய்தவாறே நின்று கொண்டிருந்தார்.

அப்போது ஒரு பருந்து கடல் பக்கத்திலிருந்து கோட்டையை நோக்கிப் பறந்து வந்தது. அவர் அதனைக் கண்டு தன் ஆள்காட்டி விரலை அசைத்து கீழ் ஸ்தாயிலும் மேல் ஸ்தாயிலும் ஏதோ ஒருவித ஒலியை உண்டாக்கினார். அதுவும் எதையோ புரிந்து கொண்டது போல பதிலுக்குக் கத்திக் கோட்டையைச் சுற்றி நாலைந்து முறை வட்டமிட்டது. பிறகு அது வேகமாகப் பறந்து போய் அரண்மனைப் பூங்காவிலுள்ள ஒரு பெரிய ஆலமரத்தின் மீது உட்கார்ந்தது.

மறுநிமிடம் அந்த மரத்திலிருந்த பறவைகளெல்லாம் 'கீச் கீச்' என்று கத்தலாயின. வாசஸ்பதி அரண்மனைப் பூங்காவிலுள்ள அரச மரத்தின் கீழ் சென்றார். அவர் ஏதோ கூறியதும் அப்பறவைகளின் சத்தம் அடங்கியது. ஒரே ஒரு பறவை மட்டும் பறந்து அவரருகே வந்து அவரைப் தொட்டுவிட்டுப் பறந்து போய் அந்த ஆலமரத்திலிருந்த ஒரு பொந்தின்



நுனியில் உட்கார்ந்தது.

வாசஸ்பதி மிகவும் மகிழ்ந்து போய் அப்பொந்தினருகே சென்றார். அதைச் சுற்றியிருந்த கொடிகளை எல்லாம் விலக்கிவிட்டு அம்பொந்தினுள் இறங்கிச் சென்றார். அது ஒரு மாளிகை முன் கொண்டு போய்விட்டது. அங்கு ஒரு தொட்டி நிறையத் தேன் இருந்தது. அதில் ஒரு பந்து மிதந்து கொண்டிருந்தது. அரசகுமாரன் பூங்காவில் விளையாடிக் கொண்டிருந்த போது பந்து அப்பொந்தில் விழுந்திருக்க வேண்டும் என்றும் அதை எடுக்க அப்பொந்தில் குதித்த அரசகுமாரன் தேன் தொட்டியில் விழுந்து இறந்து விட்டான் என்றும் அவர் தெரிந்து கொண்டார்.



களை இங்குள்ள ஒரு அறைக்குள் பூட்டி வைத்து விடுவேன்'' என்றான்.

வாசஸ்பதியோ ''இது எப்படி முடியும்? மரணம் என்பது எல்லோருக்கும் வரக் கூடியதுதானே. எனக்கும் ஒரு நாள் மரணம் வரத்தான் செய்யும். அதிலிருந்த நானும் தப்ப முடியாது. அதனால் இதை என்னால் எப்படிச் செய்ய முடியும்?'' என்றார். மன்னனோ ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீங்கள் என்ன செய்வீர்களோ ஏது செய்வீர்களோ, என் மகனை உயிர்பித்துக் கொடுக்க வேண்டும். அப்போதுதான் உங்களை இத்தீவிலிருந்து போக அனுமதிப்பேன்'' என்று கூறி விட்டு அவரது பதிலுக்குக் கூடத் காத்திராமல் போய் விட்டான்.

மன்னனின் சுயநலத்தைப் பற்றி எண்ணியவாறே வாசஸ்பதி அங்கே ஒரு பாறை மீது அமர்ந்து கொண்டார். அப்போது இரு குரங்குகள் வேகமாக ஓடி வந்து ஒரு மரக்கிளை மீது தாவின. அப்போது அவற்றில் பெண் குரங்கு கத்திக் கொண்டே மரத்தின் மீதிருந்து கீழே விழுந்தது. அதற்குக் காரணம் கிளையில் சுற்றியிருந்த விஷப் பாம்பு அதைத் தீண்டியதுதான்.

பெண் குரங்கு கீழே விழுந்ததைக் கண்ட ஆண் குரங்கு கீழே குதித்து ஓடி அதனருகே நின்று பார்த்தது. பிறகு மரக் கிளையைப் பார்த்து விஷப் பாம்பை சுட்டெரிப்பது போலப் பார்த்தது. பிறகு சற்றும் தாமதியாமல் ஓடிப் போய் எங்கிருந்தோ ஒரு மூலி

அவர் மன்னனுக்கு இவ்விஷயத்தைத் தெரியப்படுத்தவே அவனும் தன் மகனின் உடலை தேன் தொட்டியிலிருந்து வெளியே எடுத்துப் போடச் செய்தான். நல்ல வேளையாக அந்த உடல் அழுகிப் போய் விடவில்லை. மன்னன் அதற்கு ராஜகுமாரனின் ஆடைகளை அணிவித்து அப்பூங்காவிலுள்ள கட்டடத்தின் ஒரு அறைக்குள் ஒரு தங்கக் கட்டிலின் மீது படுக்க வைத்தான்.

இதற்குப் பின் வாசஸ்பதியிடம் அவன் ''உங்களுக்கு மாயம் மந்திரம் எல்லாம் தெரியும். அதனால் என் மகனை உயிர்ப்பித்துக் கொடுங்கள். இதைச் செய்தாலே உங்களை போக விடுவேன். செய்யாவிட்டாலோ உங்

கையை வேருடன் எடுத்து வந்தது. அந்த மூலிகையை அது பெண் குரங்கின் மூக்கினருகே காட்டியது. இரண்டொரு விநாடிகளில் அந்தப் பெண் குரங்கு தூங்கி எழுந்தது போல எழுந்து உட்கார்ந்தது. இதை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்த வாசஸ்பதி அந்த ஆண் குரங்கைப் பார்த்து ஏதோ கூறினார். மறு நிமிடம் அந்த ஆண் குரங்கு அவர் பக்கம் ஓடி வந்து அவரிடம் தன் கையிலிருந்த மூலிகையைக் கொடுத்து விட்டுப் பெண் குரங்கோடு அங்கிருந்து போய் விட்டது.

வாசஸ்பதி அந்த மூலிகையை எடுத்து கொண்டு போய் கட்டிலில் கிடக்கும் அரசகுமாரனின் மூக்கினருகே காட்டினார். மறுநிமிடமே அரசகுமாரன் உயிர் பெற்று எழுந்து விட்டான். உடனே வாசஸ்பதி அந்தச் செய்தியை அரசனுக்குத் தெரிவித்தார்.

அரசனும் ஓடோடி வந்து தன் மகனைக் கட்டித் தழுவிக் கொண்டான். அவன் அப்போதே வாசஸ்பதிக்குப் பல விலையுயர்ந்த பொருள்களை அளித்தான். வாசஸ்பதியோ ''அரசே! எனக்கு வேண்டியது பணம் அல்ல. தயவு செய்து என் நாட்டிற்குப் போக அனுமதியுங்கள். என் மனைவி மக்களையும் உறவினர்களையும் காண வேண்டும்'' என்றார்.

ஆனால் வைடூரியத் தீவு மன்னன் ''உங்களை இவ்வளவு விரைவில் அனுப்பி விடமாட்டேன் என் மகனைக் கண்டுபிடித்துக் கொடுத்தீர்கள். அவனுக்கு உயிரையும் அளித்தீர்





கள். அதனால் அவனுக்குக் கல்வி அளித்து உங்களுக்குத் தெரிந்ததை எல்லாம் சொல்லிக் கொடுத்த பிறகே நீங்கள் இத்தீவை விட்டுப் போக முடியும். நீங்கள் தப்பிச் செல்லவும் முடியாது. ஏனெனில் உங்களை என் வீரர்கள் கண்காணித்துக் கொண்டே இருப்பார்கள். அதனால் நீங்கள் என் மகனை உங்கள் சீடனாக ஏற்று கல்வி அளித்து வாருங்கள்'' என்று கூறினான்.

வாசஸ்பதிக்கு பதிலளிக்கக் கூட அவன் அவகாசம் அளிக்கவில்லை. வாசஸ்பதிக்கோ இது மன வருத்தத்தை அளித்தது. ஆனால் அவரால் என்ன செய்ய முடியும்? எனவே அரசகுமாரனைத் தன் சீடனாக ஏற்று அவர் கல்வி கற்பித்து வரலானார்.

அரசகுமாரனும் புத்திசாலியாதலால் ஆசிரியர் சொல்லிக் கொடுத்ததை எல்லாம் விரைவில் கற்றுக் கொண்டு விட்டான். கொஞ்சகாலத்திலேயே அவன் எல்லாவற்றையும் கற்றுக் கொண்டு விட்டான் என்று வாசஸ்பதி உறுதியாக நம்பியதும் அவன் திறமையை அரச சபையில் காட்ட அவர் ஏற்பாடு செய்தார். அது கண்டு மன்னனும் வாசஸ்பதியைப் பாராட்டி மறுநாளே பல பரிசுகளுடன் கப்பலில் புஷ்பராகத் தீவிற்கு அனுப்பி வைக்க ஏற்பாடுகள் செய்தான்.

கப்பலில் ஏறுமுன் வாசஸ்பதி அரசகுமாரனைத் தன்னருகே அழைத்து ''நான் ஒரு மந்திரத்தை உனக்குச் சொல்லிக் கொடுக்க மறந்து விட்டேன். அதை இப்போது கூறுகிறேன். இப்போது உன் உள்ளங்கையில் நீரை எடுத்துக் கொண்டு இந்த மந்திரத்தைச் சொல்லி அந்த நீரை என் கையில் விடு. அதற்குப் பின் என் கப்பல் உன் கண்களிலிருந்து மறையும் வரை இந்த மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே இரு. பிறகு அரண்மனைக்குப் போ. இதனால் உனக்கு நன்மையே ஏற்படும்'' என்றார்.

அரசகுமாரனும் வாசஸ்பதி கூறியபடியே செய்தான். அவர் ஏறிச் சென்ற கப்பல் பார்வையிலிருந்து மறையும் வரை கரையில் நின்று அவர் கூறிய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே இருந்தான். அதன் பிறகு அரண்

மனைக்குப் போய் அவன் அந்த மந்திரத்தை தன் தகப்பனாரிடம் கூற முயன்றான். அது நினைவிற்கு வரவில்லை. அது மட்டுமல்ல, அவன் அதுவரை கற்றதை எல்லாம் மறந்தும் போய் விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னரே! வாசஸ்பதி கடைசியில் தம் சீடனுக்கு எல்லாம் மறந்து போகும்படிச் செய்தது நியாயமா? அரசகுமாரனுக்கு உயிரளித்தவர் வாசஸ்பதி. அவனுக்குக் கல்வி அளித்தவர் வாசஸ்பதி. ஆனால் கடைசியில் ஒரு மந்திரத்தால் தான் கற்றுக் கொடுத்ததை எல்லாம் அவன் மறந்து போகும்படிச் செய்து விட்டாரே! இப்படிச் செய்ய என்ன காரணம்? இதற்கு சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''வாசஸ்பதி புஷ்பராக மன்னனின் அரசாங்கப் புரோகிதர். அவர் வைடூரியத் தீவை அடைந்தது புயலின் காரணமாகத்தான். அவராக அங்கு செல்லவில்லை. வைடூரியத் தீவின் மன்னன் அவரை நிர்பந்தித்து தனக்கு வேண்டியவற்றைச் செய்து கொண்டான். அரச குமாரனைக் கண்டுபிடித்தது, அவனை உயிர்ப்பித்தது, அவனுக்குக் கல்வி அளித்தது எல்லாமே அவர் வைடூரியத் தீவின் மன்னனுடைய நிர்பந்தத்தின் பேரில் செய்ததே. புஷ்பராக அரசாங்கப் புரோகிதர் அந்நாட்டு எதிரியான வைடூரிய நாட்டின் இளவரசனுக்கு உயிரளித்து கல்வி அளித்தது தம் நாட்டுக்குச் செய்த துரோகம் எனக் கருதினார். அவருடைய சீடன் புஷ்பராக அரசகுமாரனைத் தவிர வேறு யாரும் இருக்கக் கூடாது என்றும் நினைத்தார். அதனால் வைடூரிய இளவரசன் தான் கற்றதை மறக்க வாசஸ்பதி செய்தது சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அவன் சந்தேகம்!

ஒரு ஊரில் கிராம அதிகாரி தலைநகரம் போய்த் தன் வேலைகளை முடித்துக் கொண்டு தன் குதிரை மீதமர்ந்து தன் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார். வழியில் சற்று இளைப்பாற ஒரு குளக்கரையில் தங்கினார். அப்போது அவரது ஊர் வியாபாரி விசுவ லிங்கம் தலைநகரிலிருந்து வந்து கொண்டிருப்பதை அவர் கண்டார்.

அப்போது அவர் தம் மனதில் ''ஐயோ! இவன் வந்து விட்டானே. என்னைக் கண்டால் விட மாட்டேனே. இவனோடு சேர்ந்து நான் ஊருக்குப் போக வேண்டுமே. வழி நெடுக இவன் எதை எதையோ சொல்லி என் காதைத் துளைத்து விடுவானே. என்ன செய்வது?'' என்று யோசிக்கலானார்.

அவர் எதிர்பார்த்தபடி விசுவலிங்கம் அவரைக் கண்டு தன் குதிரையை நிறுத்தினான். பிறகு கீழே இறங்கி ''ஊருக்குத் தானே. இருவரும் சேர்ந்தே போவோம்'' என்று கூறினான். இருவரும் சற்று நேரத்தில் தம் ஊருக்குக் கிளம்பினார்கள்.

அப்போது கிராம அதிகாரி ''ஊர் போய் சேரும் வரை நம்மில் யார் பேசாமல் வருகிறாரோ அவருக்கு மற்றவர் தம் குதிரையைக் கொடுத்து விட வேண்டும. இதற்குச் சம்மதமா?'' என்று கேட்கவே விசுவலிங்கமும் சம்மதம் என்று கூறினான்.

இரண்டு மைல் போனதும் அவன் கிராம அதிகாரியிடம் ''பந்தயம் வெறும் குதிரை மட்டும்தானா அல்லது அதன் கடிவாளமும் சேணமும் சேர்ந்தா?'' என்று கேட்டானே பார்க்கலாம்!



# தக்காணத்து பலமான கோட்டைகள் !!

கருத்து: **மீரா உக்ரா** ◆ படங்கள்: **அரித்ரா**

**மா**ர்க் கோபோலோ பதிமூன்றாம் நூற்றாண்டில் நம் நாட்டிற்கு வந்தபோது தென்னிந்தியாவில் வரங்கலைத் தலைநகராகக் கொண்ட காகதீயர்களின் ராஜ்ஜியம் உயர்நிலையில் இருந்தது. அவர்கள் வரங்கல் கோட்டையையும் உள்நகரையும் நன்கு பராமரித்தனர். ராணி ருத்திரம்மா கோட்டை வெளிப்புறத்தை மேலும் வலுமிக்கதாகச் செய்தாள்.

உயர்தர வைரக்கற்களுக்குப் பெயர் போன மாங்கல் நகரருகே அவள் மற்றொரு பலமான கோட்டையை நிர்மாணித்தாள். 1518ல் மாங்கலில் குதுப் அலி முல்க் வந்து குதுப் ஷாஹி வம்சத்தை நிறுவினான். அவன் அங்கிருந்த கோட்டையைச் சீர்படுத்தி, பல மாளிகைகளை கட்டி அதற்கு கோல் கொண்டா என்ற பெயரிட்டான்.

கோல் கொண்டா கோட்டை 400 அடி உயர மலை மீது அமைந்துள்ளது. கோட்டையிலிருந்து அடிவாரத்திற்கு சமிக்ஞைகளால் செய்தி அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒரு மூலையில் ஏற்படும் மெல்லிய ஒலிகூட எதிர்ப்புற மூலையில் கேட்கும் விதமாக அமைந்திருந்தது. கோட்டைமீதிருந்து காவல் காப்பவன் எதிரிகள் வருவது கண்டு கை தட்டினால் அந்த ஒலி கோட்டை முழுவதிலும் எதிரொலிக்கும். இதனால் கோட்டை வாசல் காவலாளி சட்டெனக் கோட்டைக் கதவுகளை மூடி விடுவான். தண்ணீர்க் குழாய்கள் கோட்டை மதிலை ஒட்டி அமைத்திருப்பதும் இக்கோட்டையின் மற்றொரு சிறப்பான அம்சம். இதனால் கோட்டையின் 'பாலாஹிஸார்' பகுதி கடும் 'கோடையிலும்' சில்லென இருக்கும்.

*கோல்கொண்டா கோட்டை அரண்மனை மலைமீது உள்ளது.*



கோட்டைக்குள்ளேயே பயிரிட வயல்கள் உள்ளன. இவற்றில் பயிர் செய்து எப்படிப்பட்ட முற்றுகையின் போதும் உணவுப் பஞ்சம் இல்லாமல் கோட்டைக்குள் இருக்க முடியும். 1687ல் முகலாயப் படை இதனை முற்றுகை இட்டது. ஒரு நாளிரவு இருட்டில் எதிரிப்படை வீரன் ஒருவன் இக் கோட்டைமீது ஏற முயன்றான்.

அவனைப் பார்த்து நாய் குரைக்கவே காவலாளிகள் விஷயம் தெரிந்து கொண்டு அந்த வீரன் ஏறி வந்த ஏணியைத் துண்டித்து விட்டார்கள். அதனால் அவ்வீரன் ஆழ்ந்த பள்ளத்தில் வீழ்ந்து மடிந்தான். தக்க சமயத்தில் எச்சரித்த அந்த நாயின் கழுத்தில் ரத்தினங்கள் பதித்த தங்கச் சங்கிலியை அணிவித்து அழகுறச் செய்தார்கள். நான்கு மாதங்களுக்குப்பின் அக் கோட்டை அதிகாரிகளில் ஒருவன் செய்த துரோகத்தால் கோட்டை எதிரிகளின் வசமாகியது.



அக்கோட்டையின் வடகிழக்கு மூலையில் முகலாயர்கள் கோட்டையை விரிவுபடுத்தி அரை வட்ட வடிவில் ஒன்பது காவலறைகளைக் கட்டினார்கள். கோல் கொண்டா மன்னர்களை நிஜாம் உல் முல்க் எனக் கூறிவந்தார்கள். உலகப் புகழ் பெற்ற கோஹினூர் வைரம் இந்த கோல் கொண்டாவின் அருகில்தான் கிடைத்தது.

தென்னிந்தியாவில் மற்றொரு புகழ் பெற்ற கோட்டை செஞ்சிக் கோட்டை. இது முக்கோண வடிவிலுள்ள மலைகளில் அமைந்துள்ளது. இது கி.மு. மூன்றாவது நூற்றாண்டில் கட்டப் பட்டதாம். குளங்களிலிருந்தும் ஏரிகளிலிருந் தும் மண் குழாய்கள் வாயிலாக இக்கோட்டை யின் நீர் வசதி செய்யப்பட்டிருந்தது. பல மான இக்கோட்டை முகலாயப் படைகளின் எட்டாண்டு முற்றுகையைத் தாக்குப் பிடித்து நின்றது.

வேலூர் கோட்டையை விஜயநகர மன்னர் கள் சில ஐரோப்பிய நிபுணர்களின் உதவி கொண்டு கட்டினார்கள். மிகப் பெரிய இரட்டை மதில்களைச் சுற்றி மிக ஆழமான பதிநான்கடி அகல அகழிகள் உள்ளன. இதில் நூற்றுக்கணக் கான முதலைகள் திரிந்து கொண்டிருந்தனவாம்.

1857ல் நடந்த வர லாற்றுச் சிறப்பு மிகச் சிப்பாய்க் கலகத்திற் குப் பல ஆண்டு களுக்கு முன்பே



**செஞ்சிக் கோட்டை. வலதுபுறம் உள்ளது ராணிகள் வசித்த கல் யாண மஹால்.**

அதாவது 1806லேயே இங்கு கலகம் நிகழ்ந்தது. ஆயிரத்து எழுநூறு சிப்பாய்கள் அங்கிருந்த 280 ஆங்கிலேய வீரர்களைப் பிடித்து கைதிகளாக வைத்திருந்து மூன்று நாட்களுக்குப் பிறகே ஆங்கிலப் படை வந்த பிறகு அவர்களை விடுதலை செய்தார்களாம்!



வேலூர் கோட்டை

மூன்று புறங்களிலும் காவேரி நதியால் சூழப்பட்ட ஸ்ரீ ரங்கப்பட்டணத்தை ஒரு தீவுக் கோட்டை எனலாம். நான்காவது பக்கத்தில் பலமான உயர்ந்த இரு மதில் சுவர்களும் கரும் பாறைகளுக்கிடையே தோண்டப்பட்ட ஆழமான அகழியும் பாதுகாப்பாக உள்ளன. அகழியின் நீர்மட்டத்தை உயர்த்தித் தாழ்த்த கூடிய ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன.



ஹைதர் அலி

ஒன்பதாவது நூற்றாண்டில் இத்தீவில் கட்டப்பட்ட ரங்கநாதர் ஆலயத்தால் இதற்கு ஸ்ரீரங்கப்பட்டணம் என்று பெயர் ஏற்பட்டது. மாவீரர்களான ஹைதர் அலி, திப்பு சுல்தான் ஆகிய இருவரால் இது வரலாற்றுச் சிறப்பு பெற்றது. முற்றிலும் காரையால் கட்டப்பட்ட திப்பு சுல்தானின் கோடைகால வாச அரண்மனை தரியா தௌலத் மஹலில் வண்ண ஓவியங்கள் மிக அழகாக உள்ளன. அவரது மற்றொரு அரண்மனையான லால் மஹலில் 1799 மே மாதம் நடந்த போரில் பிரிட்டிஷ் படைகள் இடித்துத் தரைமட்டமாக்கின. திப்புவும் அந்தப் போரில் வீர மரணம் எய்தார். அக்கோட்டையின் பாழடைந்த பகுதிகளே இன்று வரலாற்று சின்னங்களாக விளங்குகின்றன.





# கேடுகெட்ட வீடு

ஒருநாள் காட்டு வழியே நடந்து சென்று கொண்டிருந்த காளியண்ணன் மாலையான போது எங்கே தங்கி இரவைக் கழிப்பது என்ற திகிலுடன் நாலாபுறத்திலும் சுற்றிப் பார்க்கலானான். அப்போது ஒரு கிழவன் கதறிக் கதறி அழுதவாறே அவன் முன் வந்து நின்றான்.

காளியண்ணன் அவனைத் தேற்ற முயன்று ''பெரியவரே! உங்களுக்கு வந்த கஷ்டம் என்ன?'' என்று கேட்டான். கிழவனோ ''என் கஷ்டத்தைச் சொன்னால் உன்னால் தீர்த்து வைத்து விடவா முடியும்?'' என்று கேட்டான்.

காளியண்ணனும் ''பாருங்கள் பெரியவரே! சிரிப்பவனைப் போய் யாரும் எதுவும் கேட்பதில்லை. ஆனால் அழுபவனைப் பார்த்தால் ஆறுதல்தான் கூறத் தோன்றும்'' என்றான். அதைக் கேட்ட கிழவன் கோபம் கொண்டு ''என்னைவிட வயதில் நீ எவ்வளவோ சிறியவன். ஆனால் தொண்டு கிழம் போலப் பேசுகிறாயே. எங்கள் ஊர் சோதிடன் நான் இன்னும் ஆறு வருடங்கள் உயிர் வாழ்வேன் என்று சொன்னான். ஆனால் இங்குள்ள அரை வேக்காடுகளோ நான் இன்னும் ஒரே மாதத்தில் எமலோகம் போய் விடுவேன் என்கிறார்கள். இவ்வளவுக்கும் காரணம் நான் அந்தக் கேடு கெட்ட வீட்டில் காலடி வைத்ததுதான்'' என்றான்.

காளியண்ணனும் ''கேடு கெட்ட வீடா? அது எங்கே இருக்கிறது?'' என்று ஆவலுடன் கேட்டான். கிழவனும் ''இன்னும் கொஞ்ச தூரம் போய் வலது புறமாகத் திரும்பி நட. அப்போது அந்தக் கேடு கெட்ட வீடு உன் கண்ணில் படும்'' என்று கூறிவிட்டுப் போனான்.

காளியண்ணனும் கொஞ்ச தூரம் நடந்து வலதுபுறம் திரும்பிய போது

—சிவனார் செல்வன்—

அடர்ந்த மரங்களிடையே ஒரு வீடு இருப்பதைக் கண்டான். அருகே சென்று பார்த்தபோது அது மிகப் பழைய வீடு என அவனுக்குத் தெரிந்தது. ஆனாலும் பரவாயில்லை, அன்று இரவு அங்கு தங்கி விட்டு மறுநாள் காலை அங்கிருந்து போய் விடலாம் என்று அவன் தீர்மாணித்துக் கொண்டான்.

அவன் அந்த வீட்டு வாசலை அடைந்து கதவைத் தட்டினான். கறையான் பிடித்து இத்துப் போன அந்தக் கதவைக் 'கிரீச்' சென்ற சத்தத்தோடு திறந்து கொண்டு ஒரு சித்திரக்குள்ளன் அவன் முன் தோன்றினான். அவனைக் கண்டதும் காளியண்ணன் ''இன்றைய இரவை இங்கு கழிக்க எனக்கு இடம் கொடுப்பீர்களா?'' என்று கேட்டான்.

குள்ளனும் ''உங்களைப் போல வருபவர்கள் தங்குவதற்காகத் தானே இப்படி ஒரு அழகான வீட்டை இக்காட்டில் கட்டி வைத்திருக்கிறோம். உள்ளே வாருங்கள்'' என்றான். காளியண்ணனும் தயங்கியவாறே உள்ளே சென்றான். அப்போது வேறு நான்கு குள்ளர்கள் சன்னல்களிலும் மேஜை மீதும் விளக்குகளை வைத்துக் கொண்டிருந்தார்கள். அவை எண்ணெய்த் திரி விளக்குகள் அல்ல. ஒளி விடும் பெரிய பெரிய ரத்திணக் கற்கள்!

காளியண்ணன் அவற்றைக் கண்டு வியப்புற்று நிற்கவே குள்ளனும் ''வாழ்வே விசித்தரமானது. அதை விட விசித்தரமானது என்ன இருக்கிறது?'' என்று கூறி பலமாகச் சிரித்து



''நீங்கள் எவ்வளவு நாட்கள் வேண்டு மானாலும் இங்கே இருக்கலாம். ஆனால் எங்களிடம் எந்தக் கேள்வி யையும் கேட்கக் கூடாது. மேலும் மாடியிலுள்ள தங்கத் கதவை திறக்கக் கூடாது'' என்றான்.

காளியண்ணன் குளித்து முடித்த தும் அவனுக்குப் பசி எடுத்தது. உள்ளே பெரிய மேஜை இருந்தது. அதன்மீது பல பாத்திரங்களில் உண வுப் பொருள்களை மூடி வைக்கப் பட்டிருந்தன. அவன் கேட்டதைக் குள்ளர்கள் எடுத்துப் பரிமாறினார் கள்.

காளியண்ணன் படுத்துத் தூங்க ஒரு கட்டிலில் குள்ளர்கள் மெத்தையை விரித்தார்கள். சன்னலில் தொங்க விடப்பட்டிருந்த பட்டுத் திரையை ஒரு குள்ளன் விலக்கினான். உடனே நறுமணத்துடன் கூடிய மெல்லிய பூங் காற்று அந்த அறையில் வீசலாயிற்று.

இவ்வளவு வசதிகளுடன் கூடிய வீட்டையா அந்தக் கிழவன் கேடு கெட்ட வீடு என்று கூறினான்? முட் டாள்! இதையெல்லாம் அனுபவிக்கத் தெரியாமல் அழுது கொண்டு ஓடி னானே! அவனை முட்டாளென நினைக்காமல் வேறு என்னவென்று நினைப்பதாம் என்று காளியண்ணன் மனதில் எண்ணிக் கொண்டான்.

காலையானது. எழுந்து அவன் சுகமாகக் குளித்தான். சுவையான காலைச் சிற்றுண்டி உண்டான். ஆனால் அவனால் யாருடனும் எது வும் பேச முடியவில்லை. வேலை எதுவுமில்லாமலும் பேசுவதற்கும்





யாரும் இல்லாமலும் போனதால் காளியண்ணன் அந்த வீட்டிலுள்ள ஒவ்வொரு அறைக்குள்ளும் போய்ப் பார்க்கலானான். இப்படியாக அன்றையப் பகல் கழிந்து மாலை நேரமும் வந்தது.

அப்போது அவன் அவ்வீட்டின் மாடிக்குச் சென்றான். அங்கு ஒரே ஒரு அறைதான் இருந்தது. அதன் வாசல் கதவு தங்கத்தால் ஆனது. மாலை வெயில் அதன் மீது பட்டு 'தக' 'தக' வென ஒளி வீசியது.

ஆனால் சித்திரக் குள்ளன் அந்தக் கதவை திறக்கக் கூடாது என்று கூறியது அவன் நினைவிற்கு வந்தது. அவன் மனமோ கதவைத் திறந்து பார்க்காவிட்டால் அன்றிரவு தன்னால் தூங்கவே முடியாது என்று அவன் நினைத்தான்.

என்ன ஆனாலும் சரி, கதவைத் திறந்து பார்த்து விடுவது என்று தீர்மானித்துக் கொண்டு அவன் மெதுவாகக் கதவைத் திறந்தான். அறைக்குள் இருந்ததைக் காண அவன் கண்கள் கூசின. தரை சலவைக் கல் பதிக்கப்பட்டிருந்தது. சுவர்கள் தங்கத் தகடுகள் பதிக்கப்பட்டு ஆங்காங்கே நவரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தன. அந்த அறையின் ஒரு ஓரத்தில் படிக்கட்டு ஒன்று தென்பட்டது.

காளியண்ணன் அறைக்குள் போய்ப் படிக்கட்டின் வழியாகக் கீழே இறங்கினான். அப்போது எங்கிருந்தோ ஒரு அண்டங்காக்கை பறந்து வந்து அவன் தலையைக் கொத்தியது. ஒரு கறுப்புப் பூனை அவன் மீது பாய்ந்த பிராண்டியது. ஒரு ஆந்தை அவனது காதே செவிடாகும்படிக் கூவியது. இதனால் காளியண்ணன் பயந்து நடு நடுங்கலானான்.

அப்போது ஒரு கரகரத்த குரல் இடி முழக்கம் போல ''நீ சரியாக இருபது வருடங்களுக்குப் பின் இதே நாளில் சாவாய். தெரிந்ததா மூடமே! என்றது. அதுகேட்டு மகிழ்ந்தவாறே காளியண்ணன் படிகளின் வழியே மேலேறி அறைக்குள் வந்தான். அங்கு ஐந்து குள்ளர்கள் கை கோர்த்து நின்று கொண்டு ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

காளியண்ணனும் சிரித்துக்

கொண்டே ''எல்லோரும் இங்கேகூடி என்னபேசிக்கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான். அவர்கள் ''உனக்கோ உன் மரணத்தைப் பற்றித் தெரிந்து விட்டது. அப்படியும் நீ சிரித்து கொண்டிருப்பதைப் பார்த்து தான் ஆச்சரியப்படுகிறோம்'' என்றனர்.

காளியண்ணனும் ''ஆமாம். சிரித்துக்கொண்டுதான் இருக்கிறேன். நான் ஏன் அழவேண்டும்? நான்தான் எப்போது இறப்பேன் என்பது எனக்குத் தெரிந்து போயிற்றே. அதனால் சந்தோஷப்படுகிறேன்'' என்றான். அவர்களோ ''சந்தோஷப்படுகிறாயா? இதுவரை உன்னைப் போல தன் சாவைக் கேட்டும் மகிழ்ச்சி அடையும் ஒரு மனிதனைக் கண்டதில்லை. இதை உடனே எம் தலைவருக்குத் தெரிவிக்கிறோம். இனிமேல் இந்தக் கேடு கெட்ட வீட்டில் எங்களுக்கு என்ன வேலை?! என்றுகூறிவிட்டு மாயமாய் மறைந்து போனார்கள்.

மறுநிமிடமே அந்த வீடும் மறைந்தது. காளியண்ணன் மரங்களினிடையே ஒரு சமதளத்தில் நின்று கொண்டிருந்தான்.

காளியண்ணன் ஒரு பட்டிக் காட்டுக்காரன். அவன்சில நாட்களாய் இதய நோயால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். அவனைப் பரீட்சித்த வைத்தியர்களும் சரி, அவன் ஜாதகத்தைப் பார்த்த ஜோசியர்களும் சரி, அவன் ஆறு மாதங்களுக்கு மேல் உயிர் வாழமாட்டான் என்று கூறி இருந்தார்கள். அதனால் தான் அவன் தன் குடும்பத்தவரிடம் கூடச் சொல்லிக்கொள்ளாமல் ஊரைவிட்டே கால் போன போக்கில் போய்க் கொண்டிருந்தான்.

இப்போது அவனுக்குத் தான் இன்னமும் இருபது ஆண்டுகள் உயிரோடு இருக்கப் போவது தெரிந்து விட்டது. அதனால் அவனுக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டு விட்டது. அவனுள்ளார்களுக்கும், கேடுகெட்ட வீட்டிற்கும் நன்றி செலுத்தியவாறே தன் ஊருக்கே திரும்பிச் சென்றான்.





# அப்போதைய தேவை!

கிட்டாமணி மிக நன்றாகச் சமைப்பவன் ஆனால் வாய் துடுக்கு அதிகம். பண்டங்கைளந் சிந்திச் சிதறி வீணாக்குவான். அதனால் அவனை யாரும் தம் வீட்டு விசேஷங்களுக்குச் சமையல் செய்யக் கூப்பிடுவது இல்லை. அதனால் சமையல் சுமாராகச் செய்யும் அவனது தந்தை சுப்புணியையே எல்லோரும் தம் வீட்டு விசேஷங்களில் சமையலுக்கு அழைத்துக் கொண்டனர். அவரும் வாய் பேசாமல் நிதானமாய் பண்டங்களை வீணாக்காமல் சமையல் செய்து வந்தார்.

ஒருநாள் அவ்வூர் பண்ணையார் பரமானந்தரின் பேரனின் ஆண்டு நிறைவு வரவே சொல்லி இருந்தார். அன்று சுப்புணிக்கு ஒரே ஜுரமும் உடம்பு வலியும் இருந்ததால் அதைப் பண்ணையாரிடம் கூறி தனக்கு பதிலாக அன்று தன் மகன் கிட்டாமணி சமைக்க வருவான் என்று கூறித் தன் மகனையும் பண்ணையாரின் வீட்டிற்கு அனுப்பி வைத்தான்.

கிட்டாமணியும் சமையலை ஆரம்பித்தான். வழக்கம் போல அவன் அது குறைச்சல், இது சரி இல்லை விறகு ஈரம் காய்கறி அழுகல் என்றெல்லாம் அடுக்கிக் கொண்டே போனான். பரமானந்தர் முன்கோபக்காரரே. ஆனால் வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு கிட்டாமணி கேட்டதை எல்லாம் உடனுக்குடனே வாங்கிக் கொடுத்தார். ஊராரே அவர் மிகவும் பொறுமையாக நடந்து கொண்டது கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

பரமானந்தருக்கோ வந்தவர்களுக்கு நல்ல சாப்பாடாகப் போட்டு அனுப்ப வேண்டுமே என்ற கவலை. எங்கே அவன் பாதி சமையலிலேயே தன்னால் சமைக்க முடியாது என்று கூறிவிட்டுக் கரண்டியைக் கீழே வைத்து போய் விடுவானோ என்ற

—வெ. லாவண்யா—

பயம் வேறு அவருக்கு இருந்தது.

எப்படியோ அவர் பொறுமையாக இருந்து அன்று கிட்டாமணியிடம் வேலை வாங்கி விட்டார். அன்று சாப்பிட்டவர்களும் ''ஆகா! சமையல் பிரமாதம். என்னதான் கிட்டாமணி வாய் பேசினாலும் சமையலில் அவனுக்கு இணை யாருமே இல்லை தான்'' என்று புகழ்ந்து விட்டுப் போனார்கள்.

ஆனால் பரமானந்தரின் உறவினர்களுக்கோ கிட்டாமணி பரமானந்தரிடம் நடந்து கொண்ட விதம் கொஞ்சமும் பிடிக்கவில்லை அவர்கள் கிட்டாமணியைத் திட்டிக் கொண்டே சென்றார்கள்.



கொஞ்ச நாட்களுக்குப்பின் சுப்புணி இறந்து விட்டார். அதுவரை கிட்டாமணி தன் தகப்பனாரின் வருமானத்தில் சுகமாகக் காலம் கழித்து வந்தான். ஆனால் அவர் இறந்ததும் அவன் பாடு திண்டாட்டமாயிற்று. அவனை யாரும் சமையலுக்கும் கூப்பிடவில்லை. ஏனென்றால் அவன் அடாவடிக்காரன் என்று எல்லோருக்கும் தெரியும்.

இந்த நிலையில் கிட்டாமணி பரமானந்தரின் வீட்டிற்குப் போய் ''ஐயா! உங்கள் வீட்டில் சமையலுக்கு ஆள் தேவைப்படுகிறது என்று கேள்விப்படுகிறேன். என்னை வேலைக்கு வைத்துக் கொள்கிறீர்களா?'' என்று கேட்டான்.

பரமானந்தரும் ''ஆமாம். சமையலுக்கு எனக்கும் ஒரு ஆள் தேவை தான். ஆனால் என்னால் நிறையச் சம்பளம் கொடுக்க முடியாது. நீ நம் ஜமீன்தாரின் வீட்டில் சமையல்காரனாக அமர்ந்தால் உனக்கு அங்கு நல்ல சம்பளம் கிடைக்கும்'' என்றார்.

கிட்டாமணியும் ''ஜமீன்தாருக்கும் ஒரு சமையல்காரன் தேவை என்று நானும் கேள்விப்பட்டேன். ஆனால் அங்கே ஒரு சிறு தவறு செய்தாலும் கடினமான தண்டனை கிடைக்கும். அதற்காகத்தான் அங்கே வேலை செய்ய பயப்படுகிறேன்'' என்றான்.

பரமானந்தரும் ''தவறு செய்தால் யாருமே தண்டிக்கத்தான் செய்வார்கள். அதனால் தவறே செய்யாமல் இருக்க வேண்டும்'' என்றார். அப்

போது அவன் ''நான் கொஞ்சம் துடுக்காகப் பேசுபவன் அதனால் ஜமீன்தாரர் என் பேச்சைப் பொறுத்துக் கொள்ளமாட்டார்'' என்றான்.

பரமானந்தரோ ''ஜமீன்தாரர் மிகவும் நல்லவர். நானோ கொஞ்சம் முன் கோபக்காரன் எப்போதும் வேலைக்காரர்களைத் திட்டிக் கொண்டே இருப்பேன். நீ என் வசைகளை பொறுத்துக் கொண்டு இருப்பாயா?'' என்று கேட்டார்.

இதுகேட்டு கிட்டாமணி ஆச்சரியப்பட்டு ''நீங்கள் வேலைக்காரர்களைத் திட்டுபவரா? என்னால் நம்ப முடியவில்லையே. அன்று நான் உங்கள் வீட்டில் சமையல் செய்தபோது எவ்வளவு பொறுமையுடன் இருந்தீர்கள்? என்னை திட்டவே இல்லையே!'' என்றான்.

அவரும் ''அப்போது எனக்கு உன்னால் வேலை ஆக வேண்டி இருந்தது. இப்போது நீ சொல்வதையெல்லாம் நான் பொறுமையுடன் கேட்டுச் சகித்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லையே. நான் திட்டினாலும், அதட்டினாலும், மிரட்டினாலும் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு வேலை செய்வதானால் என் வீட்டில் சமையல்காரனாக வைத்துக் கொள்கிறேன். இதற்கு சம்மதம் இல்லையென்றால் நீ வேறு எங்காவது வேலை பார்த்துக் கொள்'' என்றார்.

கிட்டாமணி தனக்கு வந்த துக்கத்தை அடக்கிக் கொண்டு அவரது கால்களில் விழுந்து ''ஐயா! என்னை மன்னித்து விடுங்கள். இனிமேல் துடுக்காக எதுவும் பேச மாட்டேன். அப்படி பேசியதால் எப்படியெல்லாம் பிறர் மனம் புண்பட்டிருக்கும் என்பதை இப்போது நான் உணர்கிறேன். எனக்கு நல்ல பாடம் கற்பித்தீர்கள்'' என்று கூறினான்.

கிட்டாமணியிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்ட பரமானந்தர் அவனை தன் வீட்டில் சமையல்காரனாக வைத்துக் கொண்டார். அது முதல் கிட்டாமணி துடுக்காகப் பேசுவதை விட்டு நல்லவனாக மாறிவிட்டான்.






விதுரர் சென்றபின் துரியோதனன் தன் தந்தையிடம் ''தந்தையே! இந்த விதுரன் எப்போதும் உங்களோடு இருப்பதால் நான் சொல்ல விரும்புவதை உங்களிடம் கூற முடிகிறதில்லை. அவர் எப்போது பார்த்தாலும் என் விரோதிகளான பாண்டவர்களைப் புகழ்ந்து கொண்டே இருக்கிறார். நாம் நம் எதிரி எப்போது ஒழிவான் என்றுதானே எதிர்பார்க்கிறோம் அதற்கான வழியைப் பார்க்க வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்ட திருதராஷ்டிரன் ''மகனே நீ நினைப்பதும் நான் நினைப்பதும் ஒன்றுதானே? விதுரன் பாண்டவர்களைப் புகழும் போது என்னால் எதுவும் பேச முடிகிறதில்லை. இதுதான் விஷயம். சரி, நீயும் கர்ணனுமாக சேர்ந்து ஏதாவது யோசித்து வைத்திருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

துரியோதனனும் ''இந்தப் பாண்டவர்கள் துருபதனின் மாப்பிள்ளைகளாகி விட்டதால் மிகுந்த பலசாலிகளாகி விட்டார்கள். அதனால் துருபதனைப் பாண்டவர்களிடமிருந்து பிரிக்க வேண்டும்'' என்றான்.

மேலும் துரியோதனன் துரௌபதியின் ஐந்து கணவர்களிடையே கலகம் மூட்டி அவர்கள் ஒருவரையொருவர் வெறுத்துக் கொள்ளமாறு செய்ய வேண்டும் என்றான். இதனால் பாண்டவர்கள் ஹஸ்தினாபுரத்திற்கே வராமல் போய் விடுவார்கள் என்பது அவனது கணிப்பு.

அவன் திருதராஷ்டிரனிடம் ''இந்



மிகத் தாழ்ந்த நிலையில் இருந்த பாண்டவர்களை மணந்து துரௌபதி இப்போது நல்ல நிலையில் இருக்கும் அவர்களை விட்டுப் பிரிந்து விடுவாளா? பாண்டவர்களும் துரௌபதியிடம் எவ்வளவு பிரியமாக இருக்கிறார்கள்! அதனால் அவர்களையெல்லாம் பிரித்து விட முடியாது. பீமனை ரகசியமாகக் கொன்று விடலாம் என்கிறயே. நீயும் அவனை கொல்ல எவ்வளவோ முயற்சிகள் செய்தாய், முடிந்ததா? சாம, தான, பேதம் என்ற உபாயங்களால் உன்னால் எதுவும் செய்ய முடியாது. இனி தண்டனை என்ற கடைசியில் மிஞ்சிய வழியைத்தான் கைப்பற்ற வேண்டும். அவர்களிடம் இப்போது பெரும் படை உள்ளது. மற்றவர்களும் அவர்களுக்கு உதவுவதற்கு முன் நாம் படை எடுத்துப் போய் அவர்களை அழிக்க வேண்டும். இதில் தர்மம் நியாயம் என்றெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது'' என்றான்.

தப் பாண்டவர்களில் மிகுந்த பலசாலி பீமன். அவனை ரகசியமாகக் கொன்று விட்டால் பாண்டவர்களால் நம்மை எதுவும் செய்து விட முடியாது. அர்ஜுனனை வெல்ல கர்ணன் இருக்கிறான். பீமன் ஒழிந்து விட்டால் பாண்டவர்களைத் தலை தூக்கி விடாமல் செய்து விடலாம்.'' என்றான்.

அப்போது அங்கு வந்து துரியோதனன் கூறியதை எல்லாம் கேட்ட கர்ணன் ''இதெல்லாம் எதுவும் நடக்காது. இதனால் பாண்டவர்களுக்கு எவ்வித கஷ்டமும் ஏற்படாது. மிக பலசாலிகளான தன் மாப்பிள்ளைகளை விட்டுப் பிரிய துருபதன் எண்ணிக் கூடப் பார்க்க மாட்டான்.

திருதராஷ்டிரனும் ''கர்ணன் சொல்வது சரி என்றே எனக்குத் தோன்றுகிறது. இதற்கு பீஷ்மர், துரோணர், விதுரன் ஆகியோர் என்ன சொல்கிறார்கள் என்று கேட்போம்'' என்றான். உடனே அம்மூவரையும் அழைத்து வர அவன் ஆட்களையும் அனுப்பினான். அவர்கள் வந்ததும் திருத




ராஷ்டிரன் விஷயத்தைக் கூறவே பீஷ்மர் ''எனக்கு பாண்டவர்களும் கௌரவர்களும் சமமே. இது நம் மூதாதையரின் சொத்து. இதில் பாதியைப் பாண்டவர்களுக்குக் கொடுத்து விட வேண்டும். அவர் களை அழைத்து அவர்களுக்குப் பாதி நாட்டைப் பிரித்துக் கொடுப் பதே சரி. அப்படிச் செய்யாவிட் டால் உனக்கும் துரியோதனன் முதலியவர்களுக்கும் கெட்ட பெயரே வரும். துரியோதனா! இது வரை நீ பாண்டவர்களுக்குப் பல கெடுதல்களைச் செய்தாய். அப்படி யும் அவர்கள் நன்றாகத்தான் இருக் கிறார்கள். அரக்கு மாளிகையில் எரிந்து போனவன் புரோசனனே. பாண்டவர்களும் குந்தியும் அதில் எரிந்து போனார்கள் என்ற தவறான செய்தி கேட்டதும் நான் யாரையும் பார்க்க விரும்பவில்லை. அவர்கள் உயிர் தப்பியதால் உன் மானம் பிழைத்தது. இனிமேலாவது நல்ல பெயரைப் பெறும் வழியைப் பார்'' என்றார்.

துரோணரும் ''பீஷ்மரின் அபிப் பிராயமே எனதும். பாண்டவர்களை வரவழைத்து அவர்களுக்குப் பாதி நாட்டைக் கொடுப்பதே சரி. காம் பில்ய நகருக்கும் செல்பவன் பாண்ட வர்களிடமும் மற்றவர்களிடமும் இன்சொல் கூறி அவர்களை ஹஸ் தினாபுரத்திற்கு அழைக்க வேண் டும்'' என்றார்.

அப்போது கர்ணன் குறுக்கிட்டு திருதராஷ்டிரனிடம் ''இந்த இரு கிழவர்களும் எப்போதும் நம் எதிரி யையே புகழ்கிறார்கள். நம் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறார்கள். இவர்கள் பேச்சைக் கேட்க வேண்டாம்'' என்று கூறி னான்.

அதைக் கேட்டு துரோணர் கோபம் கொண்டு ''கர்ணா! நீ பாண்டவர்களிடம் பகைமை கொண்டு எங்களைக் குறை கூறு கிறாய். ஓகோ! நீதான் எங்களை விடக் கௌரவர்களின் முன்னேற்றத் தில் அக்கறை கொண்டிருக்கிறாயா? உன் பேச்சைக் கேட்டு எங்கள் அறிவுரைகளை ஏற்காது போனால்



களைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே அவர்களை வரவழைத்து எல்லோரும் மனம் மகிழும்படி செய்'' என்றார்.

திருதராஷ்டிரன் ஒரு முடிவுக்கு வந்தவனாக ''ஆமாம். பீஷ்மரும், துரோணரும், நீயும் கூறுவதே சரி. எனக்கும் என் மகன்களும் பாண்டவர்களும் சமமே. விதுரா! நீயே காம்பில்ய நகருக்குப் போய் பாண்டவர்களையும், துரௌபதியையும், குந்தியையும் அழைத்து வா. நல்ல காலமாக அவர்கள் அரக்கு மாளிகையில் எரிந்து போய் விடவில்லை. துருபதனின் மகள் அவர்களது மனைவியானதும் அவர்களது. அதிர்ஷ்டமே. இனி எனக்கு எந்தக் கவலையும் இல்லை'' என்றான்.

விதுரன் பல விலையுயர்ந்த பரிசுப் பொருள்களை எடுத்துக் கொண்டு காம்பில்ய நகரை அடைந்தான். அவன் துருபதனையும் திருஷ்டத்யும்னனையும் பாண்டவர்களையும் கண்டு தான் கொண்டு வந்த பொருள்களை அவர்களுக்கும் துரௌபதிக்கும் அளித்து க்ஷேம நலன்களை விசாரித்தான்.

பின்னர் துருபதனிடம் அவனது அரசசபையில் ''அரசே! திருதராஷ்டிரனும் பீஷ்மரும் தங்களது சம்மந்தம் கிடைத்ததற்காக மிகவும் மகிழ்ச்சி கொண்டிருக்கிறார்கள் அதனால் உங்களது க்ஷேம நலன்களை அறிந்து வரும்படி என்னை அனுப்பி இருக்

கௌரவர்கள் விரைவில் அழிந்து தான் போவார்கள்'' என்றார்.

அப்போது விதுரர் திருதராஷ்டிரனிடம் ''மன்னா! எங்களால் அறிவுரைகள்தான் கூற முடியும். அதன்படி நடப்பதும் நடக்காதும் உன் இஷ்டம். கர்ணனை விட பீஷ்மரும் துரோணரும் உனது நலனில் அக்கறை கொண்டவர்கள். அவர்கள் கூறுவது உன் நன்மைக்கே. பாண்டவர்களை வெல்வது விளையாட்டல்ல. அவர்களுக்கு கிருஷ்ணரின் ஆதரவு உள்ளது. பீமனும் அர்ஜுனனும் சக்திசாலிகளே. நல்லவிதமாய்ப் பேசி சமாதானமாகப் போக முடியும் போது ஏன் போர் புரிய வேண்டும்? மக்களும் பாண்டவர்

கிறார்கள். பாண்டவர்கள் ஹஸ்தினாபுரத்திலிருந்து சென்று வெகு நாட்களாகி விட்டது. கௌரவர்களும் மற்றவர்களும் அவர்களைப் பார்க்க ஆவலாக இருக்கிறார்கள். அந்தப்புர ஸ்திரீகளும் துரௌபதியைக் காணத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். தங்கள் அனுமதி பெற்று பாண்டவர்களையும் துரௌபதியையும் குந்தி தேவியையும் அழைத்து வரும்படி திருதராஷ்டிரன் என்னிடம் சொல்லி அனுப்பினார். அதனால் அவர்களை ஹஸ்தினாபுரத்திற்கு அழைத்துச் செல்ல அனுமதி கொடுக்குமாறு வேண்டுகிறேன்'' என்றார்.



அதைக் கேட்ட துருபதன் விதுரரிடம் ''கௌரவ வம்சத்தோடு உறவு ஏற்பட்டதில் நானும் மகிழ்ச்சி அடைகிறேன். அவர்களை தாங்கள் தாராளமாக அழைத்துச் செல்லலாம். கிருஷ்ணரிடமும் பலராமரிடமும் இதுபற்றி ஒரு வார்த்தை கூறுகிறேன். பாண்டவர்களின் கருத்தையும் அறிந்து கொள்கிறேன்'' என்றான்.

அப்போது தருமர் துருபதனிடம் ''அரசே! நீங்கள் என்ன சொன்னாலும் அதன்படி நடக்கிறோம்'' என்றார். கிருஷ்ணரும் ''பாண்டவர்களை விதுரருடன் ஹஸ்தினாபுரத்திற்கு அனுப்புவதே நல்லது'' என்றார்.

துருபதனும் ''பாண்டவர்கள் என் மாப்பிள்ளைகளாக இப்போதுதான் ஆனார்கள். ஆனால் கிருஷ்ணரோ அவர்களது குழந்தைப் பருவத்திலிருந்து அவர்களோடு பழகியவர். எங்கிருந்தாலும் அவர் அவர்களது நலனையே விரும்புபவர். அதனால் அவர் கூறியதேதான் என் முடிவும்'' என்றான்.

துருபதனின் அனுமதி கிடைத்தது. பாண்டவர்கள் துரௌபதியுடனும் குந்தி தேவியுடனும் கிளம்பி விதுரருடன் ஹஸ்தினாபுரத்திற்குச் சென்றார்கள். கிருஷ்ணரும் பலராமனும் அவர்களோடு சென்றனர். பாண்டவர்கள் வருவது பற்றி திருதராஷ்டிரனுக்குத் தெரிவிக்க விதுரர் ஒரு ஆளை அனுப்பினார். திருத

ராஷ்டிரனும் பாண்டவர்களை எதிர் கொண்டழைக்க விகர்ணனையும் சித்திர சேனனையும் துரோணரை யும் கிருபாசாரியாரையும் அனுப்பி னான்.

பாண்டவர்கள் ஹஸ்தினாபுரத் தில் நுழைந்த போது அது நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. மக்கள் அவர்களைக் கண்டு மகிழ்ச்சியார வாரம் செய்தனர். பாண்டவர்கள் அரண்மனையை அடைந்து பீஷ் மரையும் திருதராஷ்டிரனையும் வணங்கினார்கள்.

ஓரிரு நாட்களுக்குப் பின் திருத ராஷ்டிரன் பாண்டவர்களையும் கிருஷ்ணரையும் அழைத்து உங் களுக்கும் துரியோதனனுக்கும் பிற் காலத்தில் மனஸ்தாபம் வரக்கூடாது என்பதற்காக இப்போதே இந்த நாட்டை இருசம பாகங்களாக்கி ஒரு பாகத்தை உங்களுக்குக் கொடுக் கிறேன். நீங்கள் காண்டவப்ரஸ்தத்தி லிருந்து கொண்டு சுகமாக ஆண்டு வாருங்கள்'' என்றான்.

தருமரும் அதனை ஏற்றார். அவர் தன்தம்பிகளுடன் துரௌபதி, குந்தி, பலராமர், கிருஷ்ணர் ஆகியோரை அழைத்துக் கொண்டு காண்டவப் பிரஸ்தத்திற்குச் சென்றார். அது ஒரே காட்டுப் பகுதி. கிருஷ்ணர் இந்தி ரனை நினைக்கவே அவனும் அவரது நோக்கம் அறிந்து தேவ லோக சிற்பியான விசுவகர்மனை அனுப்பி வைத்தான்.

விசுவகர்மா அங்கு ஒரு அழகிய நகரை நிர்மாணித்தான். அதைச் சுற்றி உயரமான மதில் சுவர்களும் அகழிகளும் இருந்தன. நகரில் பல மாளிகைகளும் அகண்ட தெருக் களும் இருந்தன. நகரின் நடுவே பாண்டவர்களின் அரண்மனை இருந்தது.

தருமர் தன் சகோதரர்களுடனும் மனைவியுடனும் அங்கு சுகமாக வாழ்ந்து ஆட்சி புரிந்து வரலானார். சில நாட்களுக்குப்பின் கிருஷ்ணர் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றார்.



# பேசும் கிளி!

ஒரு காட்டுவாசி ஒரு ஊரில் பல கிளிகளை வைத்துக் கொண்டு "இவை பேசக் கூடியவை. நீங்கள் சொல்வதைத் திருப்பிச் சொல்லும். விலை பத்தே ரூபாய். உங்களுக்கு அதிர்ஷ்டம் இருந்தால் இது பேசுவதோடு பாடவும் பாடும்" என்று கூறிக் கிளிகளை விற்றுக் கொண்டிருந்தான். அதைக் கேட்டு குப்பன் என்பவன் பத்து ரூபாய் கொடுத்து ஒரு கிளியை வாங்கிக் கொண்டு போனான்.

வீட்டில் அவன் பல மணி நேரம் பேசியும் அந்தக் கிளி ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. குப்பன் கோபமடைந்து கிளியை எடுத்துக் கொண்டு கிளி விற்பவனிடம் போய் "இதென்ன ஏமாற்று வேலை! இந்தக் கிளி நான் எவ்வளவு பேசினாலும் ஒரு வார்த்தை கூடப் பேசுகிறதில்லை. இதை எடுத்துக் கொண்டு என் பணத்தைத் திருப்பிக் கொடு" என்றான்.

கிளி விற்றவனோ "நான் ஒருமுறை விற்ற கிளியை திரும்ப வாங்கிக் கொள்ள மாட்டேன். விற்கும் போதே உங்கள் அதிர்ஷ்டப்படி நடக்கும் என்று கூறினேனே" என்று சொல்லி அந்தக் கிளியை வாங்கி ஏதோ சொல்லிப் பார்த்தான். அது பேசவில்லை. அதை நன்கு கவனித்துவிட்டு அவன் குப்பனிடம் "இது செவிட்டுக் கிளி. உங்கள் அதிர்ஷ்டம் அவ்வளவுதான்" என்று கூறி அக்கிளியை அவனிடமே கொடுத்து விட்டான்.



# சாலமரம்

சிறிது காலத்திற்கு முன் சாலமரப் பலகையாலான போர்டுகளைப் பள்ளிக் கூடங்களில் பயன்படுத்தி வந்தார்கள். இம்மரத்திற்கு அல்ஸ்டோனியாஸ் காலாரீஸ் என்று பெயர் தாவர இயலில் கொடுக்கப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் இதனை ''டெவிள்ட்ரீ'' என்கிறார்கள் ஹிந்தியில் சாடின் என்றும் மலையாளத்தில் சால விருட்சம் என்றும் சமஸ்கிருகத்தில் சப்தவர்ணம் என்றும் கூறுகிறார்கள்.

எப்போதும் பசுமையாக உள்ள சால மரம் 25 மீட்டர் உயரம் வளர்கிறது. இதன் பட்டை நல்ல சாம்பல் நிறத்தில் இருக்கும். கிளைகள் பரந்து வளர்ந் திருக்கும். இளம் பச்சை நிறத்தில் இதன் மலர்கள் கொத்துக் கொத்தாய்ப் பூக்கும். காய்களும் கொத்துக் கொத்தாய் காய்க்கும். இக்காய்கள் 30லிருந்து 60 செ.மீ. நீளமிருக்கும்.

வருடம் முழுவதும் மழை பெய்யும் பகுதிகளில் குறிப்பாக மேற்குக்கடற்கரைப் பகுதியில் இவை அதிகமாய் வளர்கின்றன. இதன் பட்டையில் மருந்தின் குணம் உள்ளது. இதை அறுத்து செய்யப் பட்ட பலகை மிக மிருதுவாக இருக் கும். இதனால் பெட்டிகளும், பென் சில்களும், நெருப்பு குச்சிகளும் தயாரிக்கிறார்கள்.



சில பகுதிகளில் உள்ளவர்கள் இம்மரங்களில் பிசாசுகள் வசிப்பதாக நம்புகிறார்கள். மேற்கு மலை சாதியினரோ இம்மரங்களின் கீழே உட்காரக் கூட பயப்படுகிறார்கள்.

நம் நாட்டு முனிவர்கள்

# ததீசி

**நா**ன்காவது வேதமான அதர்வணத்தின் மூலபுருஷரான அதர்வண முனிவரின் வம்சத்தில் தோன்றியவர் ததீசி. சிறு வயதிலிருந்தே ததீசி வாழ்க்கையில் கடும் நியமங்களைக் கடைப்பிடித்து வந்தார். முழுமனதுடன் தியானத்தில் மூழ்கி இருப்பவர். இவரது கடுந்தவத்தால் இவரது உடல் எலும்புகள் கூடப் புனிதமாயின.

தேவர்களின் அதிபனான இந்திரன் இவரிடம் இயற்கையின் சில ரகசியங்களைக் கூறி அவற்றை யாருக்கும் கூறக் கூடாது என்று எச்சரித்தும் இருந்தான். ததீசியும் அதற்கு ஒப்புக் கொண்டார். ஆனால் சிறிது காலம் கழிந்ததும் வைத்திய நிபுணர்களான அசுவினி தேவர்கள் அந்த ரகசியங்களை தமக்கு கூறும்படி வேண்டவே ததீசியும் அவற்றைத் தெரிவித்து விட்டார்.

இதை அறிந்த இந்திரன் கோபம் கொண்டு அவரது தலையை வெட்டிவிட முடிவு செய்தான். இதை அறிந்த அசுவினி தேவர்கள் முன்கூட்டியே அவரது தலையை வெட்டி எடுத்து பத்திரப்படுத்தி விட்டு அவரது உடலில் ஒரு குதிரையின் தலையைப் பொருத்தி விட்டனர். இந்திரன் அந்தத் தலையை வெட்டிவிட்டுப் போனதும் அவர்கள் தாம் எடுத்து வைத்த தலையை அவரது உடலில் பொருத்தி அவரை முன் போல ஆக்கி விட்டார்கள்.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்து வந்த போரில் எலும்புகளை ஆயுதங்களாகப் பயன்படுத்தினால் தேவர்களுக்கு வெற்றி கிடைக்கும் எனக் கேட்ட அவர் தம் எலும்புகளைக் கொடுத்தார். இவ்வாறு தம்மையே நற்பணிக்காக அர்பணித்த ததீசியின் பெயர் என்றென்றைக்கும் நிலைத்து விட்டது.



# உங்களுக்குத் தெரியுமா?

1. குருநானக் பாடும்போது அவரது சீடர் ஒருவர் 'ரபாப்' வாசிப்பாராம். அவர் யார்?
2. நம் நாட்டில் ஒரு நதிக்கு நான்கு பெயர்கள் உள்ளன. அந்த நதி எது?
3. வென்றவர்கள் பின்னும் தோற்றவர்கள் முன்னும் செல்லும் விளையாட்டு எது?
4. சாதாரண சுவாசத் துடிப்பின் வேகம் என்ன?
5. தென்னிந்தியாவிலுள்ள ஒரே ஜைன குகைக் கோவில் எது?
6. பாரசீக சாம்ராஜ்யத்தை நிறுவியவர் யார்?
7. நம் புராணங்கள் பாதங்களில் அம்புபட்டு இறந்தவர் என்று யாரைக் கூறுகின்றன?
8. அமெரிக்காவின் தேசியப் பறவை எது?
9. விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள மிக உயரமான மலைச் சிகரம் எது?
10. நூல் நிலையத்தை முதன் முதலில் நிறுவிய கிரேக்க அறிஞர் யார்?
11. ''பறக்கும் பாம்பு'' என்று ஏன் பெயர் வந்தது?
12. உலகிலேயே மிக நீளமான ரயில் பாதை எது?
13. தம் பெயர்களில் நிறங்களின் பெயர்களைக் கொண்ட நான்கு கடல்கள் யாவை?

# விடைகள்

1. மர்தானா.
2. பிரம்ம புத்திரா நதி
3. ஜூடோ
4. நிமிடத்திற்கு 15-18 துடிப்புகள்
5. தமிழ்நாட்டில் புதுக்கோட்டையருகே உள்ள சித்தன்னவாசல்.
6. சைரஸ் சக்ரவர்த்தி
7. ஸ்ரீ கிருஷ்ணர்
8. சொட்டை கருடப்பறவை
9. தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள ஆனை முடி 2700 மீட்டர் உயரம்.
10. யூரிபீடஸ் (கிமு 480-406)
11. ஒரு மரத்திலிருந்து வேறு மரத்திற்குத் தாவிச் செல்வதால்
12. மாஸ்கோவிலிருந்து விளாடிவாஸ் டாக் வரை செல்லும் 5864 மைல் நீள ரயில் பாதை.
13. வெண்கடல், கருங்கடல், செங்கடல், மஞ்சள் கடல்.



# எது வைத்தியம்?

அனந்து கைராசிக்காரரான ஆயுர் வேத வைத்தியர். அவருக்கு நல்ல பெயர். நல்ல வருமானமும் கூட. அவரிடம் மணி என்பவன் வைத்தியத் தொழிலைக் கற்கச் சேர்ந்தான். அவரது வருமானத்தையும் அவரிடம் வரும் நோயாளிகளின் பெரும் எண்ணிக்கையையும் கண்டு அவன் ஆச்சரியமும் பொறாமையும் கொண்டான்.

ஒருமுறை அப்பகுதியில் ஒரு விசித்திர நோய் கண்டது. மக்களுக்குப் பசியோ, தாகமோ எடுக்கவில்லை. அதனால் அவர்கள் உணவே உட்கொள்ள முடியாமல் உடல் மெலிந்து இறந்து போகலானார்கள். அதுவரை பார்த்ததும் கேட்டுமிராத அந்நோய் பற்றி அனந்து பல புத்தகங்களையும் ஏட்டுச் சுவடிகளையும் பார்த்து அந்நோய் என்ன என்பதையும் அதற்கு என்ன மருந்து கொடுக்க வேண்டும் என்பதையும் தெரிந்து கொண்டார்.

அவர் மணியை அழைத்து ''இந்த நோய்க்கு மருந்து தயாரிக்க வேண்டும். நீ போய் இதற்கான மூலிகைகளைச் சேகரித்து வா'' என்று சொல்லி மூலிகைகளின் பெயர்களைக் கூறி அவனை அனுப்பினார். அவன் அம்மூலிகைகளைச் சேகரித்து அவற்றில் ஒரு பாதியைத் தனக்கு வைத்துக் கொண்டு மறுபாதியை அனந்துவிடம் கொடுத்தான்.

அனந்து அந்த மூலிகைகளைக் கொண்டு குளிகைகளை தயாரிப்பதை மணி கவனமாகப் பார்த்தான். அவர் அக்குளிகைகளை ஒரு ஜாடியில் போட்டு வைத்தார். அன்றே அவன் தான் வைத்திருந்த மூலிகைகளைக் கொண்டு குளிகைகளைத் தயாரித்து ஒரு ஜாடியில் போட்டு வைத்துக் கொண்டான்.

—சுபாஷிணி சங்கர்—

மறுநாள் மணி அனந்துவிடம் ''நான் தங்களிடம் கற்க வேண்டிய தைக் கற்று விட்டேன். இனி தனியா கத் தொழில் செய்யப் போகிறேன்'' என்றான். அனந்துவோ ''நீ இன்ன மும் எதையும் சரியாகக் கற்கவில்லை. இன்னமும் ஒரு வருடம் என்னிடம் இரு. சிறுசிறு நோய்களைத் தீர்க்க மருந்து கொடுத்துப் பழகு. அதன் பிறகு நீ தனியாகப் போய் தொழில் செய். அப்போதுதான் எல்லோருக் கும் நன்மை'' என்றார்.



மணியோ ''இல்லை. எனக்கு எல்லா மருந்துகளும் செய்யத் தெரி யும். இந்தப் புது நோய்க்கும் மருந்து கொடுக்க முடியும். இதனால் எனக் கும் பேரும் புகழும் பணமும் உங் களுக்கு கிடைப்பது போலக் கிடைக் கும்'' என்றான். அனந்து அவனது மன நிலையைப் புரிந்து கொண்டார்.

அவரும் ''சரி, நீ அடுத்த ஊருக்குப் போய் உன் தொழிலை ஆரம்பி. நேற்று நான் தயாரித்த மருந்தை முத லில் நோயாளிக்குக் கொடுத்தால் வயிற்று வலியால் அவஸ்தைப்படு வான். இது இரண்டு மூன்று நாட் களுக்கு இருக்கும். பிறகு அவனிடம் மருந்தை மாற்றிக் கொடுப்பதாகச் சொல்லிச் சொல்லி அதே மருந்தைக் கொடுத்து வந்தால் சில நாட்களில் குணமடைந்து விடுவான். மருந்தை விட நோயாளிக்கு வைத்தியர் மீது நம்பிக்கை ஏற்படுவதுதான் முக்கி யம். எனவே உன்மீது நோயாளிகள் நம்பிக்கை கொள்ளும்படிச் செய். அதிலேயே அவர்களது பாதி நோய் குணமாகிவிடும்'' என்றார்.

மணி அவர் கூறியதை அவ்வளவா கப் பொருட்படுத்தவில்லை. அவர் தயாரித்த மருந்து போலத் தானும் தயாரித்து வைத்திருப்பதால் நோயாளிகளை குணப்படுத்தி விட முடியும் என்று எண்ணினான். அவன் அவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு அடுத்த ஊருக்குப் போய்த் தன் தொழிலை ஆரம்பிக்கலானான்.

மணியிடம் முதல் நாளே இருவர் மட்டுமே வைத்தியம் செய்து கொள்ள வந்தார்கள். அவர்களுக்கு மணி தான் தயாரித்து வைத்திருந்த குளிகை களைக் கொடுத்தான். அதை உட்



கொண்டதும் அவர்கள் கடுமையான வயிற்று வலியால் அவஸ்தைப்பட்டார்கள். இச் செய்தி ஊர் முழுவதும் பரவியது.

மறுநாள் அந்நோயாளிகள் வராமல் போகவே மணி அவர்களது வீட்டிற்குப் போய் ''பயப்படாதீர்கள். நான் மருந்தை மாற்றி தருகிறேன். இந்த நோய்க்கு எந்த மருந்து கொடுத்தாலும் இரண்டு வாரங்களுக்கு இப்படித்தான் இருக்கும். நீங்கள் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். பிறகு சரியாகி விடும்'' என்றான். அவர்கள் மேலும் இரண்டு நாட்கள் அவனிடம் மருந்து வாங்கிப் சாப்பிட்டார்கள். அவர்களது வயிற்றுவலி அதிகமாயிற்றேயொழியக் குறையவில்லை.

அதற்குப்பிறகு அவர்கள் அவனிடம் போகவில்லை. வேறு புதிய நோயாளிகளும் அவனிடம் வைத்தியம் செய்து கொள்ள வரவில்லை.

எல்லோரும் அடுத்த ஊரிலுள்ள அனந்துவிடமே போய் மருந்து வாங்கிக் கொண்டு உட்கொள்வதை மணி கவனித்தான். அவன் அவ்வூராரிடம் ''நீங்கள் ஏன் சிரமப்பட்டு அடுத்த ஊர் அனந்துவிடம் போகிறீர்கள்? நானும் அதே மருந்துதான் கொடுக்கிறேன். அதனால் அங்கே போக வேண்டாம். என்னிடம் வாருங்கள்'' என்று சொல்லிப் பார்த்தான். அப்படியும் யாரும் அவனிடம் போகவில்லை.

அப்போதும் மணி ''இவர்கள் தன்னால் என்னிடம் வருவார்கள். அனந்துவின் மருந்து ஒன்றும் இவர்களை சீக்கிரம் குணப்படுத்தி விடாது'' என்று தனக்குள் கூறிக் சமாதானப் படுத்திக் கொண்டான். ஆனால் அவன் எதிர்பார்த்தபடி யாரும் வரவில்லை. மேலும் அனந்துவிடம் போய் மருந்த வாங்கி வந்தவர்களெல்லாம் தாம் குணமடைந்து வருவதாகத் திருப்தியுடன் கூறினார்கள். விரைவிலேயே அவர்கள் குணமடைந்தும் விட்டார்கள்.

இதைக் கண்ட மணி திகைத்துப் போனான். தன்னிடம் வைத்தியம் செய்து கொள்ள வந்து இருவர் கூட தன்னிடம் வராமல் அனந்துவிடம் போய் மருந்து வாங்கி சாப்பிட்டு குணமடைந்ததை அவன் கண்டான். அவ

னால் அவ்வூரில் இருக்க முடிய வில்லை. உடனே கிளம்பிப் போய் அடுத்த ஊரிலுள்ள அனந்துவின் வீட்டை அடைந்தான்.

அப்போது அங்கு ஏராளமான நோயாளிகள் அனந்துவிடம் சிகிச்சை பெற வந்திருந்தார்கள். மணியால் அவரை உடனே கண்டு பேச முடிய வில்லை. அதனால் மாலையாகும் வரை அவன் அங்கே ஒரு ஓரத்தில் உட்கார்ந்திருந்தான். எல்லோரும் போனபின் அவன் உள்ளே போய் அனந்துவைக் கண்டான். அவரிடம் ''இப்படி எனக்கு நீங்கள் ஏமாற்றம் அளிக்கலாமா?'' என்று கேட்டான்.

அனந்துவும் ''உனக்கு நானா ஏமாற்றம் அளித்தேன்? எப்போது? எப்படி? என்று கேட்டார். அவனும் ''நீங்கள் செய்த மருந்தால் நோயாளி குணமடைய சில நாட்கள் பிடிக்கும் என்றீர்கள். முதலில் ஓரிரண்டு நாட் களுக்குக் கடும் வயிற்று வலி இருக் கும் என்றும் அந்த மருந்தைத் தொடர்ந்து உட்கொண்டால் சில நாட் களில் குணமாகி விடும் என்று கூறினீர் கள். ஆனால் உங்களிடம் வரும் நோயாளிகள் நான்கைந்து நாட்களில் குணமடைந்து விடுகிறார்களே. நீங் களும் நான் கொடுக்கும் மருந்தைத் தானே கொடுக்கிறீர்கள்? ஆனால் என்னிடம் ஏன் நோயாளிகள் வருவ தில்லை?''என்று கேட்டான்.

அனந்துவும் ''நீ தயாரித்துக் கொடுத்த குளிகைகளைத்தான் நான்



கொடுத்து வருகிறேன். ஆனால் நீ தனி யாகப் போன பின் தயாரித்த மருந்துக் கலவையில் ஏதாவது மாற்றம் செய் தாயா?'' என்று கேட்டார் அவனும் யோசித்து ''ஒருவேளை ஏதாவது ஓரிரண்டு மூலிகைகளின் அளவுகள் அதிகமாகி இருக்கலாம்'' என்றான்.

அப்போது அனந்து ''மருந்தின் கலவை சரியாக இருக்க வேண்டும். என் மருந்தில் சரியான அளவில் கல வையை நீதானே செய்தாய். இனியும் மருந்துகளில் எவ்வளவு சேர்க்க வேண்டுமோ அவ்வளவையே சேர். இதையெல்லாம் நீ என்னிடம் கற்றது தானே'' என்றார்.

அப்போது மணி ''அப்படியானால் இனிமேல் நானே உங்களுக்குச் சரி

யானஅளவில்கலவை செய்து மருந்து தயாரித்துக் கொடுக்கிறேன். எனக்குத் தான் எல்லாம் தெரியுமே, என்னை உங்கள் கூட்டாளியாக வைத்துக் கொண்டு உங்கள் வருமானத்தில் பாதியை எனக்குக் கொடுங்கள்'' என்றான்.

அனந்துவோ கோபத்தோடு ''முடியாது. உனக்குத் தெரிந்தது அரை குறை. நீ உன் மருந்தில் கலவை சேர்த்தது போல உன் மூளையை அதிகம் பயன் படுத்திச் சேர்த்து விட்டால் என் நோயாளிகளின் கதி என்னவாகும்? நீ உன் மருந்தைச் செய்ததே பலருக்கு தீங்கு விளைவித்தது. இதற்காக உன்னை நீதிபதியிடம் ஒப்படைத்திருக்க வேண்டும். இது மன்னிக்க முடியாத குற்றம்'' என்றார்.

அவரது கோபத்தைக் கண்டு மணி பயந்து போனான். மேலும் அனந்து ''இனிமேல் நீ எனக்கு யாரும் மருந்து தயாரிக்க உதவ வேண்டாம். நானே மூலிகைகளை எடுத்து வந்து சரியாக மருந்து தயாரித்துக் கொள்கிறேன். உன் மாதிரி அரை வேக்காடுகளால் தான் நல்ல வைத்தியர்களின் பெயரும் கெட்டு விடுகிறது. நோயாளிக்கு வைத்தியரிடம் முழு நம்பிக்கை ஏற்பட வேண்டும். அதுவே அவனது பாதி நோயைப் போக்கி விடும். மருந்து மட்டும் நோயாளியைக் குணப்படுத்தி விடாது. இதை முதலில் தெரிந்து கொள்'' என்றார்.

மணிக்கு தான் செய்தது எவ்வளவு பெரிய தவறு என்பது புரிந்தது. அவன் உடனே அனந்துவின் கால்களில் விழுந்து ''நான் இனிமேல் மனித உயிர்களுடன் இப்படி விளையாட மாட்டேன். என்னை மறுபடியும் உங்களிடமே வைத்துக் கொண்டு வைத்தியத்தைக் கற்றுக் கொடுங்கள். நான் எல்லாம் கற்றாகி விட்டது என்று நீங்கள் என்னைத் தனியாகத் தொழில் புரிய அனுமதிக்கும் வரை உங்களை விட்டுப் போக மாட்டேன்'' என்று கெஞ்சினான்.

அனந்தும் அவன் கோரிக்கையை ஏற்றார்.






# சூ..மந்திரக்காளி!

ஒரு கடற்கரை கிராமத்தில் கண்ணன் என்ற இளைஞன் இருந்தான். அவன் அயல் நாடுகளுக்குப் போய் வேலை செய்து நிறையப் பணம் சம்பாதித்துக் கொண்டு வரலாம் என்ற நோக்கத்தோடு ஒரு வர்த்தகக் கப்பலில் கிளம்பிச் சென்றான். ஆனால் அக்கப்பல் நடுக்கடலில் புயலில் சிக்கிக் கவிழ்ந்து விட்டது.

அதிலிருந்த பலர் கடலில் மூழ்கிப் போயினர். ஒரு சிலர் என்ன ஆனார்களென்று தெரியவில்லை. கண்ணன் மட்டும் அலைகளால் ஒரு தீவின் கரையில் ஒதுக்கப்பட்டான். அத்தீவில் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை ஒரு மனிதனையோ ஒரு மிருகத்தையோ அல்லது ஒரு பறவையையோ அவன் பார்க்கவில்லை.

எங்கு பார்த்தாலும் தென்னை மரங்கள் இருக்கவே அவன் ஒரு தென்னை மரத்தில் ஏறித் தேங்காய்களைப் பறித்து உரித்து அவற்றின் இளநீரைப் பருகி தேங்காயைத் தின்று பசியைப் போக்கிக் கொண்டான். அவன் மீண்டும் ஒரு தென்னை மரத்தின் மீதேறி நாலாபுறமும் பார்த்துக்கொண்டிருந்த போது ஒரு காட்டுப் பன்றி ஆகாயத்தில் பறந்தவாறே அத்தீவுக்கு வந்து கொண்டிருப்பது தென்பட்டது.

கண்ணன் அதை ஆச்சரியத்துடன் பார்த்தான். ஏனெனில் அதற்கு இறக்கை இருக்கவில்லை. அது அத்தீவின் கடற்கரையில் இறங்கிப் படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கிற்று. கண்ணன் மரத்திலிருந்து இறங்கி அப்பன்றியருகே போய்ப் பார்த்தான். அது சாதாரணப் பன்றிதான். ஆனால் அதன் பற்கள் நீண்டு வளைந்து பயங்கரமாய் இருந்தன. அதனருகே ஒரு பெரிய வைரம் கிடந்தது. அதை அப்பன்றிதான் கவ்வி எடுத்து வந்திருக்க வேண்டும்.

—காரை. குருமூர்த்தி—



கண்ணன் அந்த வைரத்தைக் கையில் எடுத்துப் பார்த்தான். ''இந்த வைரத்தால் நான் கோடீஸ்வரனாகி விடலாமே'' என்று அவன் நினைத்தான். அப்போது அப்பன்றி தூக்கம் கலைந்து எழுந்திருக்கலாயிற்று. அது கண்டு கண்ணன். ''இது என்னைத் தாக்கு முன் நான் எங்காவது போய் விட்டால் நல்லது'' என்று நினைத்தான் மறுநிமிடமே ஆகாயத்தில் அவன் பறந்து செல்லலானான். அப்போது அவனுக்கு அந்த வைரத்தால் தான் ஆகாயத்தில் தான் பறந்து சென்று கொண்டிருக்கிறான் என்பது விளங்கியது. அவன் ஒரு தென்னை மரத்தின் மீது போய் உட்கார்ந்தான்.

இதற்குள் பன்றி எழுந்து கண்ணன் இருந்த தென்னை மரத்தின் கீழ் வந்தது. அது கண்ணனின் கையிலிருந்த வைரத்தைப் பார்த்து விட்டு பயங்கரமாக உறுமியது. கண்ணனோ ஒரு கனமான தேங்காயைப் பறித்து அப்பன்றியின் தலைமீது விட்டெறிந்தான். அந்த அடியால் பன்றி தன் நினைவை இழந்து சுருண்டு வீழ்ந்தது. கண்ணன் மரத்திலிருந்து இறங்கி ஒரு பெரிய கல்லை எடுத்து அப்பன்றியை அடித்து நசுக்கிக் கொன்றான்.

அந்தப் பன்றி உருவில் வந்தவன் ஒரு மந்திரவாதி. கண்ணன் அவனை இன்னாரெனத் தெரிந்து கொள்ளாமலேயே கொன்று விட்டான். அதனால் அவனுக்கு சக்திவாய்ந்த அந்த வைரம் கிடைத்துவிட்டது. ஆனால் அந்தத் தீவில் இன்னும் சில மந்திரவாதிகள் இருப்பதை அவன் அறியவில்லை.

கண்ணன் அந்த வைரத்தை பத்திரமாக வைத்துக் கொண்டு ''நான் இத்தீவு முழுவதையும் சுற்றிப் பார்க்க வேண்டும்'' என்று நினைத்தான். மறுநிமிடமே அவன் ஆகாயத்தில் செல்லலானான்.

ஓரிடத்திலிருந்து புகை வரவே அங்கே யாரோ இருக்க வேண்டுமென நினைத்த அவன் அங்கே இறங்கினான். அங்கே ஒரு குடிசை இருந்தது. அதன்முன் காலில்லாத ஒருவன் உட்கார்ந்து கொண்டு ஒரு ஆட்டுக் குட்டியை நெருப்பில் வாட்டிக் கொண்டிருப்பதைக் கண்டான். கண்ணன் அவனை அணுகி ''ஐயா!




எனக்கு உண்ண ஏதாவது கொடுத்து இன்றிரவு நான் தங்க இங்கு இடம் கொடுப்பீர்களா?'' என்று கேட்டான்.

அவனும் தான் வாட்டிய மாமிசத்தில் கொஞ்சம் கொடுத்தான். கண்ணன் அதைச்சாப்பிடும் போது அவன் கண்ணனைப் பார்த்த விதம் சந்தேகத்திற்கு இடமளித்தது. அதற்கேற்ப அவன் கண்ணனிடம் ''நீ இங்கே எப்படி வந்தாய்?'' என்று கேட்டான். கண்ணனும் தன்னைப் பற்றிக் கூறித் தன்னிடமிருந்த வைரத்தையும் எடுத்து அவனிடம் காட்டினான்.

அவனும் ''நான் கால் இல்லாதவன். நீ எனக்கு அந்த வைரத்தைக் கொடுத்தால் உனக்கு ஒரு மந்திரக் கோடாலியைக் கொடுக்கிறேன். அதன் பிடியைத் தட்டி நெருப்பு மூட்டு என்றால் அது சில கட்டைகளை வெட்டிப் போட்டு அவற்றில் தீ மூட்டும். அதன் தலை மீது தட்டி ''தலையை வெட்டு'' என்றால் எதிரிலுள்ள மனிதனின் தலையையோ அல்லது மிருகத்தின் தலையையோ வெட்டி விடும்'' என்றான்.

கண்ணனும் ''சரி நீ கோடாலியைக் கொடு. நான் வைரத்தைக் கொடுக்கிறேன்'' என இடது கையில் வைரத்தை வைத்துக் கொண்டு வலது கையை நீட்டினான். அந்த மனிதனும் கோடாலியைக் கொடுத்து விட்டு வைரத்தை எடுக்கலானான். கண்ணன் சற்றும் தாமதியாமல் கோடாலியின் தலையைத் தட்டி ''தலையை வெட்டு'' எனவே மறுநிமிடமே அது அந்தக் கால் இல்லாதவன் தலையை வெட்டித் தள்ளியது.

கண்ணனுக்கு இப்போது மந்திரக் கோடாலியோடு வைரமும் கிடைத்து விட்டது. அவன் அவற்றோடு நடந்து மாலைப் பொழுதாகும் போது இன்னொரு குடிசையை அடைந்தான். அதன் முன் கைகளில்லாத ஒருவன் உட்கார்ந்திருந்தான். அவனருகே ஒரு சிறிய சட்டி இருந்தது. அவன் தன்னை நோக்கி வரும் கண்ணனைப் பார்த்துத் தன்னருகே இருந்த சட்டியைத் தன் முக வாய்க் கட்டையால் நகர்த்தினான். அதிலிருந்த பால் கீழே சிந்தி பெரும் வெள்ளமாகிக் கண்ணனை நோக்கிப் பாயலாயிற்று. அது அந்தக்



குடிசையைச் சுற்றி வெள்ளக் காடாக ஆக்கிவிட்டது.

அப்போது கண்ணன் தன் வைரத்தின் உதவியால் காற்றில் மிதக்கலானான் அதைக் கண்ட அந்தக் கை இல்லாதவன் ''இதென்ன மாய வித்தை?'' என்று கேட்டான். அப்போது கண்ணன் தன்னிடமிருந்த வைரத்தைக் காட்டி ''இதனால் நாம் விரும்புவது எதையும் அடையலாம்'' என்றான். அப்போது கையில்லாதவன் ''நீ இந்த என் மந்திரச் சட்டியை வாங்கிக் கொண்டு பதிலுக்கு அந்த வைரத்தை எனக்குக் கொடுக்கிறாயா? இந்த சட்டி நீ விரும்பும் உணவைக் கொடுக்கும். இதைக் கவிழ்த்தால் ஒரு நாட்டையே முழுகடிக்கும் வெள்ளம் கிளம்பி வரும்'' என்றான்.

கண்ணனும் அவனுக்கு வைரத்தைக் கொடுப்பது போல பாவனை செய்து தன்னிடமிருந்த கோடாலியின் தலையைத் தட்டி ''தலையை வெட்டு'' எனவே கோடாலி உடனே கை இல்லாதவன் தலையை வெட்டி எறிந்தது. அப்போது கண்ணன் அந்தச் சட்டியை எடுத்துக் கொண்டான்.

மறுநாள் காலை அவன் எழுந்து அங்கிருந்து சென்றான். மாலை வேளைக்கு அவன் ஒரு காட்டை அடைந்தான். எங்கோ தப்பட்டை ஒலிப்பது கேட்டு அவன் மட்டுமல்ல, அக்காட்டிலுள்ள யானை, புலி, சிங்கம் ஆகிய மிருகங்களும் பயந்து போயின. அவை அங்கும் இங்கும் ஓடலாயின. சற்று நேரத்தில் அந்தத் தப்பட்டை ஒலியும் நின்றது.

கண்ணன் அந்த ஒலி வந்த இடத்திற்குச் சென்றான். மரங்களுக்கிடையே இருந்த ஒரு பரந்த வெளியில் ஒரு ராட்சஸன் உட்கார்ந்திருந்தான். அவன் முன் மிருதங்கம் போல ஒன்று இருந்தது. அவன் கண்ணனைப் பார்த்ததும் ''வா சாப்பிட'' என்று அழைத்தான். கண்ணனும் 'ஓ' வருகிறேன்! என்று கூறி ராட்சஸனிடமிருந்து கொஞ்ச தூரம் தள்ளியே உட்கார்ந்தான்.

ராட்சஸன் கண்ணன் உண்பதற்கு மாமிசம் கொடுக்கவே, கண்ணன் அதைப் பார்த்து விட்டு ''இது மனித மாமிசம் போலத் தெரிகிறதே. இதெல்

லாம் நான் சாப்பிட மாட்டேன்'' என்று கூறித் தன் சட்டியை எடுத்து உணவு வரவழைத்து உண்ணலா னான். ராட்சஸன் அச்சட்டியைப் பற்றிக் கேட்கவே கண்ணனும் ''இதில் நாம் விரும்பியதை வர வழைத்துச் சாப்பிடலாம்'' என்றான்.

அப்போது ராட்சஸன் ''எனக்கு அந்த சட்டியைக் கொடு. நான் இந்த மிருதங்கத்தைக் கொடுக்கிறேன். இதன் வலதுபுறம் அடித்து வாசித் தால் எதிரிலுள்ளவர்கள் பயந்து ஓடி விடுவார்கள். இடது புறம் வாசித்தால் உன்னைக் காக்க ஒரு பெரிய படையே வந்து நிற்கும்'' என்றான். கண்ணனும் சட்டியைக் கொடுத்து அந்த மிருதங்கத் தைக் வாங்கிக் கொண்டு தன் கோடாலியின் உதவியால் அந்த ராட் சஸனின் தலையை வெட்டினான்.

நான்கு மந்திரப் பொருள்களோடு கண்ணன் பல நாடுகளுக்குச் சென் றான். முடிவில் ஒரு நாட்டை அடைந்தபோது அதன் மன்னன் கொடுங்கோலன் என்று தெரிந்தது. மக்களை மிகவும் துன்புறுத்தினான். நாட்டிற்குப் புதிதாக வந்தவர்களைப் பிடித்து துன்புறுத்தினான். கண்ணன் அந்நாட்டில் அடி எடுத்து வைத்ததும் வீரர்கள் அவனைப் பிடிக்க வந்தனர்.

கண்ணன் மிருதங்கத்தின் வலது பக்கத்தை வாசிக்கவே வீரர்கள் பயந்து ஓடினார்கள். இதைக் கண்டு மன்னன் அவனைப் பிடிக்கத் தன் படையை அனுப்பினான். கண்ணன் மிருதங்கத் தின் இடது புறம் வாசிக்க அவனைக் காக்கப் பெரிய படை வந்துவிட்டது. மன்னன் மேலும் படைகளை அனுப் பவே கண்ணன் சட்டியைக் கவிழ்த்து வெள்ளம் பெருக்கெடுத்து ஓடச் செய்து அந்தப் படையை மூழ்கடித் தான். மன்னன் தன்னந் தனியனா னான். கண்ணன் தன் கோடாலியால் அவன் தலையை வெட்டி எறிந்தான்.

மக்கள் மகிழ்ந்து கண்ணனை அந்நாட்டு மன்னனாக்கினார்கள். கண்ணன் மந்திரப் பொருள்களின் உதவியால் நாட்டை நன்கு ஆண்டு வந்தான்.





குடிசையைச் சுற்றி வெள்ளக் காடாக ஆக்கிவிட்டது.

அப்போது கண்ணன் தன் வைரத்தின் உதவியால் காற்றில் மிதக்கலானான் அதைக் கண்ட அந்தக் கை இல்லாதவன் ''இதென்ன மாய வித்தை?'' என்று கேட்டான். அப்போது கண்ணன் தன்னிடமிருந்த வைரத்தைக் காட்டி ''இதனால் நாம் விரும்புவது எதையும் அடையலாம்'' என்றான். அப்போது கையில்லாதவன் ''நீ இந்த என் மந்திரச் சட்டியை வாங்கிக் கொண்டு பதிலுக்கு அந்த வைரத்தை எனக்குக் கொடுக்கிறாயா? இந்தசட்டி நீ விரும்பும் உணவைக் கொடுக்கும். இதைக் கவிழ்த்தால் ஒரு நாட்டையே முழுகடிக்கும் வெள்ளம் கிளம்பி வரும்'' என்றான்.

கண்ணனும் அவனுக்கு வைரத்தைக் கொடுப்பது போல பாவனை செய்து தன்னிடமிருந்த கோடாலியின் தலையைத் தட்டி ''தலையை வெட்டு'' எனவே கோடாலி உடனே கை இல்லாதவன் தலையை வெட்டி எறிந்தது. அப்போது கண்ணன் அந்தச் சட்டியை எடுத்துக் கொண்டான்.

மறுநாள் காலை அவன் எழுந்து அங்கிருந்து சென்றான். மாலை வேளைக்கு அவன் ஒரு காட்டை அடைந்தான். எங்கோ தப்பட்டை ஒலிப்பது கேட்டு அவன் மட்டுமல்ல, அக்காட்டிலுள்ள யானை, புலி, சிங்கம் ஆகிய மிருகங்களும் பயந்து போயின. அவை அங்கும் இங்கும் ஓடலாயின. சற்று நேரத்தில் அந்தத் தப்பட்டை ஒலியும் நின்றது.

கண்ணன் அந்த ஒலி வந்த இடத்திற்குச் சென்றான். மரங்களுக்கிடையே இருந்த ஒரு பரந்த வெளியில் ஒரு ராட்சஸன் உட்கார்ந்திருந்தான். அவன் முன் மிருதங்கம் போல ஒன்று இருந்தது. அவன் கண்ணனைப் பார்த்ததும் ''வா சாப்பிட'' என்று அழைத்தான். கண்ணனும் 'ஓ' வருகிறேன்! என்று கூறி ராட்சஸனிடமிருந்து கொஞ்ச தூரம் தள்ளியே உட்கார்ந்தான்.

ராட்சஸன் கண்ணன் உண்பதற்கு மாமிசம் கொடுக்கவே, கண்ணன் அதைப் பார்த்து விட்டு ''இது மனித மாமிசம் போலத் தெரிகிறதே. இதெல்

